உ

சிவ சிவ

# 'ஸ்ரீ குமரகுருபரர்'

## ஸ்ரீலஸ்ரீ காசிவாசி முத்துக்குமாரசுவாமித் தம்பிரான் சுவாமிகள் அவர்கள்

அருளாணையின் வண்ணம்

வெளிவரும் சமய - இலக்கியத் திங்கள் இதழ்.



அட்டையில்:

ஸ்ரீ குமரகுருபர சுவாமிகள்
திருவருவம்

# ஸ்ரீ குமரகுருபரர்

தொகுதி 3 வைகாசி பகுதி 8

## அருளாளரின் நினைவு

6-6-81 அன்று திருப்புனந்தாள் ஸ்ரீ காசிமடம் 20-ஆவது அதிபர் ஸ்ரீலஸ்ரீ காசிவாசி அருள்நந்தித் தம்பிரான் சுவாமிகள் அவர்கள் பரிபூர்ணம் எய்திய நினைவு நாள். தற்போது அதிபராக எழுந்தருளி யுள்ள 21-ஆவது அதிபர் ஸ்ரீலஸ்ரீ காசிவாசி முத்துக்குமாரசுவாமித் தம்பிரான் சுவாமிகள் அவர்கள் இந் நாளை ஸ்ரீவாராணசியில் தமக்குச் சொந்தமான கேதார கட்டம் ஸ்ரீகுமாரசுவாமி மடத்தில் வெகு விமரிசையாகக் கொண்டாடத் திருவுளம் பற்றி வாராணசிக்கு எழுந்தருள உள்ளார்கள்.

அதேநாளில் இருபதாவது அதி பர் தோன்றிய தலமாகிய திரு நெல்வேலி ஜில்லா அரியநாயகி புரத்தில் ஸ்ரீவைகுண்டம் ஸ்ரீகுமர குருபரன் சங்கம் அறக்கட்டளை யின் ஷரத்துக்களின்படி அன்னம் பாலிப்பு திருமுறை விழா முதலி யன நடைபெறும்.

21-5-81ஆம்தேதி ஸ்ரீலஸ்ரீஆதி குமரகுருபர சுவாமிகள் அவர்க ளின் நினைவு மகேஸ்வர பூஜைத் திருநாள். தமிழுக்கும் சைவத் துக்கும் அவர் ஒரு முக்கியத் தேவை. அந்த அருளாளரின் நினைவு நமக்கு மிகத்தேவை.

மூன்றுமணி விஷயங்களை அருள் பழுத்த கனிச்சுவைப் பகுதியுள் ஸ்ரீலஸ்ரீ காசிவாசி எஜமான் சுவாமிகள் அவர்கள் அறிமுகம் செய்து வைக்கிறார்கள். முயற்சித் தால் அந்தமணி நமக்கும் கிடைக் கும்!

உட்கார்ந்தபடியே நடன மாடுவது எப்படி என்று உங்களுக் குத் தெரியுமா? இது என்ன பைத்தியக்காரத்தனம் என்று நினைக்கிறீர்கள்? உட்கார்ந்த படியே ஆடுபவர் யார்? ஏன்? என்ற விபரங்கள் அறிய வாகீச கலாநிதி திரு. கி. வா. ஜ அவர் களின் 'இருந்தாடும் காரணம்' என்ற கட்டுரையைப் படிக்க வேண்டும்.

போற்றிப் பஃறொடை விளக்க வுரை இந்த இதழுடன் நிறைவு பெறுகிறது. திருவாசகமும் நாட்டுப்புற மரபுகளும் கட்டுரை யும் இந்த இதழுடன் நிறைவு பெறுகிறது.

சைவசித்தாந்தத்தின் மேன்மை களைப்பற்றிப் பல நாட்டவர்களும் கருதிய கருத்துக்களை ஒருசேரத் திரட்டிக் கட்டுரையாக அளித் துள்ளார் திரு. எஸ். இராம லிங்கம் அவர்கள்.

தீட்சை வகைகள் பற்றியும் ஸ்ரீ குமரகுருபர சுவாமிகள் வர லாறு பற்றியும் திரு. தா. ம. வெ. அவர்கள் இந்த இதழுக்கு அளித்துள்ளார்கள்.

பிற வழக்கமான அம்சங்களும் இந்த இதழுக்கு அணி செய் கின்றன.

நி. ஆ-ர்.

## 33. தன்னை அறிதல் இறக்குமதி

தமிழாக்கம்: கோ. வன்மீகநாதன்

எவனொருவன் பிறரை அறிகின்றானோ அவன் கற்றறிந்தவனாயிருக்கிறான்
எவனொருவன் தன்னைத்தானே அறிகிறானோ
அவன் ஞானியாவான்
எவனொருவன் மற்றவர்களை வெல்கின்றானோ
அவன் உடல்தசை ஆற்றல் படைத்தவன்
எவனொருவன் தன்னைத்தானே வெல்கின்றானோ
அவன் (உண்மையான) வலியவன்.
எவனொருவன் யாதாவது ஒரு காரியத்தை எப்படியாவது சாதித்து விடுவது
என்று உறுதிகொண்டிருக்கிறானோ அவன் மனஉரம் கொண்டவன்
எவனொருவன் தன் மையத்தை (நடுநிலைமையை) இழக்காமல்
இருக்கின்றானோ அவன் தேயாது, அழியாது நெடுங்காலம் இருக்கின்றான்.
எவனொருவன் இறந்துங்கூட (அவன் அதிகாரப்) இருக்கின்றானோ
அவன் நீண்ட ஆயுட்காலம் உடையனாகிறான்

## 34. மாபெரும் டௌ (பராபரன்) எங்கும் ஓடுகிறது

நிற்குண பிரமம் (டௌ) எத்திசையும் எங்கும் ஓடுகிறது,
(ஒரு வெள்ளத்தைப் போல) அது இடப்புறமோ
வலப்புறமோ ஓடலாம்.
கோடானுகோடி பொருள்கள் அதனிடமிருந்து தம் உயிரைப் பெறுகின்றன;
அது அவற்றை நிராகரிப்பதில்லை.
தன் வேலை முடிந்துவிட்டால்
அது (அவற்றைக்) கவர்ந்து கொள்வதில்லை.
கோடானு கோடி பொருள்களுக்கு அது உடை உணவு அளிக்கின்றது:
ஆயினும் அவற்றைத் தன் பொருட்கள் என்று
உரிமை கொண்டாடுவதில்லை.
மனத்தால் அல்லது ஆணவத்தால் கருதப்படாதபோது
பல சமயங்களில் அதைச் சிறியதாக எண்ணலாம்
(ஆயினும்) எல்லாப் பொருள்களுக்கும் உறைவிடமாயிருந்து
அவற்றைத் தன் பொருள்கள் என உரிமை கொண்டாடுதலால்
அதைப் பெரியதாக எண்ணலாம்.
கடைசிவரையில் அது தன் பெருமையைச் சொல்லிக் கொள்வது
இல்லையாதலால்,
அதன் பெருமை தானாகவே நிலைநாட்டப்படுகிறது [1]

---

1. ஒப்பிடுக ''சிறியவாகப் பெரியோன்'' — மாணிக்கவாசகர், திருவண்டப்பகுதி, வரி 6.

# ஆலயப் பூஜைப் படிக்காசு நிதிக்கு
## நன்கொடையளித்த அன்பர்கள் விபரம்

| | | |
|---|---|---|
| | 3—4—81 வரை கூடுதல் | 9641—60 |
| 1. | திருநெல்வேலி திரு. T. V. சங்கரகுமாரு அவர்கள் | 10—00 |
| 2. | திருவாடானை தாலுக்கா அலுவலக எழுத்தர் திரு. S. வேலாயுதம் அவர்கள் | 15—00 |
| 3. | திரு. சுப்பையா முதலியார் அவர்கள் | 2—00 |
| | கூகலூர் வாரவழிபாட்டு சங்க அங்கத்தினர்கள் | |
| 4. | திரு. K. N. பச்சையப்பன் அவர்கள் | 25—00 |
| 5. | திரு. P. சரவணகவுண்டர் அவர்கள் | 15—00 |
| 6. | திரு. K. N. இராமசாமி அவர்கள் | 15—00 |
| 7. | திரு. K. N. பழநி கவுண்டர் அவர்கள் | 7—00 |
| 8. | திரு. பழனிசாமி அவர்கள் | 7—00 |
| 9. | திரு. M. இளங்கோ அவர்கள் | 7—00 |
| 10. | திரு. K. K. இராமசாமி | 7—00 |
| 11. | திரு. S. V. வெங்கட்ராமன் அவர்கள் | 5—00 |
| 12. | திரு. K. P. சின்னசாமி அவர்கள் | 5—00 |
| 13. | திரு. முனியப்பர் அவர்கள் | 3—00 |
| 14. | திரு. K. K. வேலுசாமி அவர்கள் | 3—00 |
| 15. | திரு. S. R. காந்திராம் அவர்கள் | 3—00 |
| 16. | திரு. த. மாணிக்கம் அவர்கள் | 5—00 |
| 17. | திரு. V. N. சுப்ரமண்யம் அவர்கள் | 2—00 |
| 18. | திரு. M. R. வெங்கடேச பிரபு அவர்கள் | 2—00 |
| 19. | திரு V. K. துரைசாமி அவர்கள் | 2—00 |
| 20. | திரு. K. M. இராமலிங்கம் அவர்கள் | 2—00 |
| 21. | திருமதி. K. R. வெங்கிட்டம்மாள் அவர்கள் | 2—00 |
| 22. | திரு. V. கிருஷ்ணசாமி அவர்கள் | 5—00 |
| 23. | திருமதி. R. பத்மா அவர்கள் | 2—00 |
| 24. | திரு. K P. குட்டியப்பன் அவர்கள் | 2—00 |
| 25. | திரு. N. G. செல்வன் அவர்கள் | 1—00 |
| 26. | திரு. S. பொன்னுசாமி அவர்கள் | 2—00 |
| 27. | திரு. K. N சிவக்கொழுந்து அவர்கள் | 2—00 |
| 28. | திரு. K. R. இராமரத்தினம் அவர்கள் | 2—00 |
| 29. | கல்கத்தா பல்கலைக்கழகம் டாக்டர் திரு. T B. சித்தலிங்கையா அவர்கள் | 25—00 |
| 30. | சென்னை திரு. N. சேதுராமன் அவர்கள் | 51—00 |

31. திருப்பனந்தாள் K. V. S. S. கல்லூரித் துணைப்பேராசிரியர்
டாக்டர். திரு. ம. வே. பசுபதி அவர்கள் 51—00
32. திருச்செங்காடு திரு. தி. அ. மாரிமுத்து
அவர்கள் 20—00
33. சிதம்பரம் திரு. திருநாவுக்கரசு பிள்ளை அவர்கள் 500—00
34. சிதம்பரம் திருமதி. T. சிவகாமு அம்மாள் அவர்கள் 500—00
35. அய்யனூர் திரு. S. மங்களசிவன் அவர்கள் 25—00
36. சிதம்பரம் புலவர் திரு. R. இராமலிங்கம் M. A.
அவர்கள் 11—00
37. குத்தாலம் அட்வகேட் திரு. C. இராஜகோபால்
அவர்கள் 101—00
38. திருச்சி மலைக்கோட்டை திரு. M. இராமதாஸ்
அவர்கள் 11—00

திருப்பனந்தாள் திருவிளக்கு வழிபாட்டு உறுப்பினர்கள்

39. திருமதி கோ. ஜெயலட்சுமி அவர்கள்
வடக்கு மடவிளாகம் 10—00
40. ,, வெ. விசாலாட்சி அவர்கள் சன்னதித்தெரு 10—00
41. ,, கோ. பவானி அவர்கள் ,, ,, 5—00
42. ,, பா. மயிலாப்பாள் அவர்கள் தெற்கு வீதி 5—00
43. ,, ந. செல்லம்மாள் அவர்கள் வளையல் காரத் தெரு 5—00
44. ,, க. குப்பம்மாள் அவர்கள் வடக்குத் தெரு 5—00
45. ,, M. சாந்தநாயகி அவர்கள் மேலவீதி 5—00
46. ,, M. சூர்யகலா அவர்கள் ,, 5—00
47. ,, கோ. சரஸ்வதி அவர்கள் மேலவீதி 3—00
48. ,, மு. சிவசங்கரி அவர்கள் தெற்கு வீதி 3—00
49. ,, சு. தருமாம்பாள் அவர்கள் வடக்கு வீதி 3—00
50. செல்வி சு. பிரகந்நாயகி அவர்கள் மேலவீதி 3—00
51. திருப்பனந்தாள் ஆசிரியர் திரு. K. முருகேசன் அவர்கள் 2—00
52. கும்பகோணம் திரு. அப்பு அவர்கள் 5—00
53. ஆவுடையார் கோவில் திரு. முத்துக்குமாரசுவாமி
சேர்வை அவர்கள் 333—0
54. கும்பகோணம் சிவனடியார் திருக்கூட்ட அன்பர்
திரு. V. K. மவுந்தராசப் பிள்ளை அவர்கள் 11—00

3—5—81 வரை கூடுதல் 11,509—00

நன்கொடை அனுப்ப வேண்டிய முகவரி:-

ஸ்ரீலஸ்ரீ காசிவாசி
முத்துக்குமாரசுவாமித் தம்பிரான் சுவாமிகள் அவர்கள்
அதிபர், ஸ்ரீகாசிமடம், திருப்பனந்தாள்.

பூங்கொன்றைக் கண்ணியான் பொன்மன் றிறைஞ்சிடுக
ஆங்கொன்றைக் கண்ணி யவர்.



# அருள் பழுத்த கனிச்சுவை

திருப்பனந்தாள் ஸ்ரீ காசிமடத்து அதிபர்
ஸ்ரீலஸ்ரீ காசிவாசி முத்துக்குமாரசுவாமித் தம்பிரான்
சுவாமிகள் அவர்கள்

மனிதப் பிறப்பில் செய்த புண்ணியத்தால் சுவர்க்கம் கிடைக்கிறது. வேண்டினர்க்கு வேண்டியதை வேண்டியபடி கொடுக்கும் மூன்று அதிசயங்கள் தேவலோகத்தில் இருப்பதாகச் சொல்வார்கள். சிந்தாமணி, காமதேனு, கற்பக விருட்சம் என்பன அவை.

விண்ணுலகத்தைச் சிந்தாமணி காக்கிறது. மண்ணுலகத்தைக் காப்பது எது? அவ்வளவு சுலபமாக இதற்கு விடை சொல்லிவிட முடியாது.

நாடு காக்கும் மன்னனைச் சொல்லலாம். இது குடியாட்சிக் காலம். இப்பொழுது யாரைச் சொல்வது? எல்லாரும் இந்நாட்டு மன்னர் என்றவகையில் எல்லாருமே-மக்கள் யாவருமே நாடு காக்கின்றவர்கள்தாம். இது வாதத்திற்குச் செல்லுபடியாகும்.

சட்டம் இயற்றும் அதிகாரம் யார் யார் கையில் இருக்கிறதோ அவர்கள்தாம் உண்மையிலேயே நாடு காக்கின்றவர்கள்.

மன்னர் ஆட்சிக் காலத்தில் வாழ்ந்தவர்கள் ஸ்ரீ குமர குருபர சுவாமிகள். அவர்களும் மன்னன் நாட்டைக் காக்கிருன் என்று நேரடியாகச் சொல்லவில்லை. எல்லாவற்றிற்கும் மேலான தெய்வ சங்கல்பமே நாட்டைக் காக்கும் என்று உணர்ந்த மகாஞானி 'மன்னன் நாட்டைக் காக்கிருன்' என்று சொல்லுவாரா? அப்படியென்ருல் தெய்வசங்கல்பமே நாட்டை மண்ணுலகைக் காக்கிறது என்று சொல்லியுள்ளாரா? அதுவும் இல்லை. தெய்வ சங்கல்பம் மண்ணுலகை மட்டும் காக்கவில்லை என்பது மட்டுமல்லாமல் காத்தலை மட்டும் அது செய்யவில்லை; ஏனைய படைத்தல் முதலிய கருமங்களும் அது செய்வனவே. எனவே மண்ணுலகத்தைக் காப்பது எது என்ற கேள்விக்குத் தெய்வ சங்கல்பம் என்று பதில் சொன்னுல் அது அபரிமிதமான விடை ஆகும்.

மன்னனையும் மக்களையும் கூட காப்பது நாற்றுமுடிதான்! பயிர் விளையவில்லையென்ருல் உயிர் வாழ்வது எப்படி? உயிர்களே இல்லையென்ருல் மன்னன் ஏது? மணிமுடி ஏது?

இப்பொழுது முன்னைய வினவுக்கு விடை சொல்லிப் பார்ப்போம்,

மண்ணுலகைக் காப்பது எது?
மன்னனின் மணிமுடி!

முன்னே போட்ட பீடிகைக்கு வித்யாசமாக விடை வந்திருக்கிறதே என்று தயங்காதீர்கள். மணிமுடிதான்-அரசனின் கிரீடம் தான் மண்ணுலகைக் காக்கிறது.

கிரீடத்தின் தத்துவத்தைத் தெரிந்து கொண்டால் எல்லாம் தெளிவாகும்.

நெற்பயிரின் நாற்று முடிதான் கிரீடம். செல்வவளம் காட்டும் மன்னர் மரபு அதைத் தங்கத்தினுல் செய்து மணிகளைப் பதித்து விலையுயர்ந்ததாக அமைத்துக் கொண்டது. நாற்று முடிதான் மணிமுடி என்று நினைவு படுத்துவதற்காகவே மகுடாபிஷேகத்தன்று அந்த மணிமுடியை வேளா

ளர்கள் எடுத்துக் கொடுப்பது என்று ஒருபழக்கம் இருந்திருக்கிறது. இதைத்தான் 'தழைய முடி தொட்டுக் கொடுத்தருள் செய்குலம்' என்று மகாவித்துவான் சொல்லுவார். 'வெண்ணெமன் சடையன் தங்கள் மரபுளோர் கொடுக்க வாங்கி வசிட்டனே புனைந்தான் மெளலி' என்பார் கவிச் சக்கரவர்த்தி.

ஆக மணி முடிதான் மண்ணுலகைப் புரக்கிறது. மணி முடியின் நடுவில் இருக்கும் மணி சூளாமணி. இந்தச் சூளா மணியைச் சொன்னாலே மணிமுடியைச் சொன்னதாகும்; நாற்று முடியையும் சொன்னதா தும்.

ஸ்ரீ குமரகுருபர சுவாமிகள் குருநாதராகிய ஸ்ரீமாசிலா மணியைப் பார்த்துக் கேட்கிறார். 'சுவாமி! மாசிலாமணி யாகிய தங்களை எளியேன் எந்த மணியாகச் சொல்வது. விண்ணுலகத்தைக் காக்கும் சிந்தாமணி என்று சொல்வதா? மண்ணுலகத்தைக் காக்கும் சூளாமணி என்று சொல்வதா?' என்று முதலில் கேட்கிறார்கள்.

விண்புரக்கும் சிந்தா மணியென்கோ; மெய்ச்சுடரால்
மண்புரக்கும் சூளா மணியென்கோ

[விண்-தேவலோகம்; புரக்கும்-காக்கும்; என்கோ-என்று சொல்லுவதுவோ; மெய்-உண்மையான; சுடரால்-ஒளியால் சூளாமணி-முடிமணி]

ஸ்ரீ மாசிலாமணியைச் சிந்தாமணி என்று சொல்வது முற்றப் பொருத்தமாகாது. சிந்தாமணியால் மண்ணுலக மக்களுக்கு என்ன பயன் இருக்கிறது?

சூளாமணி என்று சொல்வதுகூடத்தான் முற்றப் பொருத்தமாகவில்லை. சூளாமணியால் விண்ணுலகத் தேவர்களுக்கு என்ன பயன் இருக்கிறது?

சிவனே ஆகிய ஸ்ரீ மாசிலாமணியால் எல்லா உலகங்களுமே பயன் அடைகிறது என்று அருள நினைக்கிறார், ஸ்ரீ சுவாமிகள்.

"பண்பும் ஞானச் செல்வமும் செறிந்த துறவிகளுக்கெல்லாம் சிகாமணி என்று உன்னைச் சொல்லட்டுமா" என்று முடிவாகச் சொல்கிறார்.

சிகாமணி என்பது உச்சிமணி. பண்பும் ஞானச்செல்வமும் செறிந்த துறவிகள் ஒரு பரம்பொருளைத்தான் உச்சிமேற் கொள்வார்கள்; சில்லாண்டிற் சிதையும் சிலதேவர் சிறுநெறி சேரார். மானுடத்தை மதித்துப் போற்ற மாட்டார்கள்.

அத்தகு துறவிகளின் சிகாமணி மாசிலாமணி என்றால் மாசிலாமணியே பரம்பொருள்.

—பண்பார்

திருமா முனிவர் சிகாமணிஎன் கோ?சீர்
தருமாசி லாமணியைத் தான்.

[பண்பு+ஆர்=பண்பார்; ஆர்-செறிந்த, பொருந்திய; திரு-செல்வம். இங்கு ஞானச் செல்வத்தைக் குறிக்கும்;சிகாமணி-உச்சிமணி; சீர்தரு-மேதகைமைகளைக் கொடுக்கும்]

சிந்தாமணியைக் காட்டிலும், சூளாமணியைக் காட்டிலும், உயர்ந்த சிகாமணி எங்கள் மாசிலாமணி என்பது இப்பாடலின் கருத்து. இவ்வெண்பாவின் முழுவடிவைப் பார்ப்போம்.

'விண்புரக்கும் சிந்தா மணியென்கோ? மெய்ச்சுடரால்
மண்புரக்கும் சூளா மணியென்கோ—பண்பார்
திருமா முனிவர் சிகாமணிஎன் கோ?சீர்
தருமாசி லாமணியைத் தான்'

சூளாமணி என்பதற்கு அடைமொழியாக வந்த மெய்ச்சுடர் என்பதற்கு ஞானஒளி என்று பொருள் கொண்டால் மூன்று மணியுமானவர் ஸ்ரீ மாசிலாமணி என்று பொருள் கொள்ள வேண்டிவரும்.

—சிவ சிவ

---

அட்டையில் :

# ஸ்ரீ குமரகுருபர சுவாமிகள்

## தா. ம. வெள்ளைவாரணம்

ஸ்ரீ குமரகுருபர சுவாமிகள் பாண்டிநாட்டில் திருநெல்வேலி மாவட்டத்தில் ஸ்ரீவைகுண்டம் என்ற ஊரின் வடபகுதியான ஸ்ரீ கயிலாசபுரத்தில் சைவ வேளாள மரபில் சண்முகசிகாமணி கவிராயர்க்கும் சிவகாமி அம்மையார்க்கும் மகனாகப் பிறந்தார். ஐந்தாம் வயது வரை வாய் பேசாதிருந்தார். திருச்செந்திலாதிபன் திருவருளால் வாய் பேசப்பெற்றுக் கந்தர்கலி வெண்பாப் பாடினார். மதுரையில் தங்கி மீனாட்சியம்மை பிள்ளைத்தமிழ்பாடி அரங்கேற்றும் போது மீனாட்சிபால் முத்துமாலையைப் பரிசாகப் பெற்றார். திருமலைநாயக்க மன்னனால் சிவிகையில் ஏற்றுவிக்கப் பெற்றுப் பட்டினப் பிரவேசம் செய்விக்கப் பெற்றார். நாயக்கமன்னனின் வேண்டுகோளின்படி நீதிநெறி விளக்கம் பாடிக் கொடுத்தார். மற்றும் மதுரைக் கலம்பகம் மீனாட்சியம்மை இரட்டை மணிமாலை, மீனாட்சியம்மை குறம் என்பன இயற்றினார். திருவாரூரில் தியாகேசரை வணங்கி நான்மணிமாலை இயற்றினார். தருமரபும் சென்று ஸ்ரீ மாசிலாமணி தேசிகரிடம் துறவு நெறி வேண்டினார். காசிவாசமேனும், சிதம்பரவாசமேனும் செய்து வருமாறு அவர் பணிக்கச் சிதம்பரத்துக்குப் புறப்பட்டு வழியில் வைத்திஸ்வரன் கோயிலில் தங்கி முத்துக்குமாரசுவாமி பிள்ளைத்தமிழ் இயற்றினார். சிதம்பர்த்தில் தங்கி சிதம்பர மும்மணிக்கோவை, சிதம்பர செய்யுட்கோவை, சிவகாமியம்மை இரட்டைமணிமாலை இயற்றினார், மீண்டும் தருமை ஆதீனத்துக்கு வந்து ஸ்ரீ மாசிலாமணி தேசிகரிடம் துறவு நெறி பெற்றுக்கொண்டார். தமது ஞானாசிரியரின் பேரில் பண்டாரமும்மணிக்கோவை பாடினார். வெள்ளியம்பலவாணத் தம்பிரான் முதலியவர்களுக்கு ஞான சாத்திரமும் தமிழ் இலக்கிய இலக்கணங்களும் கற்பித்தார். ஞானாசாரியரிடம் உத்தரவு பெற்றுக் காசிக்குச் சென்றார், சகலகலாவல்லிமாலை பாடிக் கலைமகளின் காட்சிபெற்று இந்துஸ்தானிபேசும்ஆற்றல்பெற்றார். பாதுஷாவின்முன் சிங்கத்தின் மீது ஏறிச்சென்றன்று பாதுஷாவால் வணங்கப்பெற்றார். மற்றும்பற்பல அற்புதங்கள்நிகழ்த்தி திருமடம் எழுப்ப இடம்பெற்றார். முகமதியரால் மறைக்கப் பட்டிருந்த காசி விசுவநாதரின் இலிங்கத் திருமேனியை வெளிப்படுத்தித் திருக்கோயில் கட்டி வழிபாடு நடத்துவித்தார். கேதாரகட்டத்தின் அருகில் திருமடம் கட்டினார். திருமடத்தில் தங்கி இந்துஸ்தானியிலும் தமிழிலும் புராணப் பிரசங்கம் செய்தார். காசித் துண்டி விநாயகர் பதிகம், காசிக் கலம்பகம் என்பன இயற்றினார். ஒருசமயம் சிவயோகத்தில் அமர்ந்திருந்தபோது வைகாசித் திங்கள் கிருஷ்ண பட்சத்து திருதியையில் பரிபூரணம் எய்தினார். இவரது காலம் 17-ம் நூற்றாண்டாகும்.

உ

சிவ சிவ

# திருப்பனந்தாளில் ஸ்ரீலஸ்ரீ ஆதி குமரகுருபர சுவாமிகள்

## 295-ஆம் ஆண்டு

## மகேசுவர பூசைத் திருநாள்

திருப்பனந்தாள் ஸ்ரீ காசிமடத்து 21-வது அதிபர்

ஸ்ரீலஸ்ரீ காசிவாசி

முத்துக்குமாரசுவாமித் தம்பிரான் சுவாமிகள் அவர்களின்

திருவுளப்பாங்கின் வண்ணம் நடைபெறுவது

துன்மதி ஆண்டு வைகாசித் திங்கள் 8-ஆம் நாள் (21-5-81) வியாழக்கிழமை முற்பகல் மணி 9 முதல் 10-30 வரையிலும், பிற்பகல் 4-மணி முதல் 7-மணி வரையிலும் ஸ்ரீ குமரகுருபர சுவாமிகள் நினைவாகக் கருத்தரங்கு நடைபெறும்.

முற்பகல் நிகழ்ச்சி

தலைவர்:

திரு. கம்பன் அடிப்பொடி அவர்கள்

பொதுப்பொருள், மதுரைக் கலம்பகம்.

ஆய்வுரை அறிஞர்கள்:

மகாவித்வான் திரு. ச. தண்டபாணி தேசிகர் அவர்கள்

—கலம்பக உறுப்புக்களின் மூலங்கள்

டாக்டர். திரு. T. B. சித்தலிங்கையா M. A., Ph.D. அவர்கள்,

—மதுரைக் கலம்பகத்துள் சமயக்கருத்துக்கள்

திரு. மு. அருணாசலம் M. A., அவர்கள்

—மதுரையின் மாண்பு

பிற்பகல் நிகழ்ச்சி

தலைவர்:

பேராசிரியர். திரு. அ. ச. ஞானசம்பந்தன் M. A., அவர்கள்.

—பொதுப்பொருள்: மதுரைக்கலம்பகம்

வாகீச கலாநிதி திரு. கி. வா. ஜகந்நாதன் M. A., அவர்கள்.

—மதுரைக் கலம்பகத்துள் இலக்கியத்தன்மை

திரு. கே. எம். வேங்கடராமையா M. A., B. O. L. அவர்கள்.

—மதுரைக் கலம்பகத்தில் உணர்ச்சிகள்

நண்பகலில் பூஜையும், மகேசுவர பூஜையும் நடைபெறும்.

அன்பர்கள் வந்து திருவருள் பெறுவாராகுக.

ஸ்ரீ காசிமடம்
திருப்பனந்தாள்
1-5-81

ஆணைப்படி,
முத்து. மெய்கண்டதேவன்,
மானேசர்.

**1981ம்-வருடம்**

கீழ்க்கண்ட இடங்களுக்குத் தொகை அனுப்பப்பட்டுள்ளது:

ஸ்ரீ குமரகுருபரசுவாமிகள் நினைவுநாள் அன்னம்பாலிப்பு.

| | | | |
|---|---|---|---|
| வாராணசி | 500 | உத்திரகோசமங்கை | 140 |
| ஷி பண்டாரா | 700 | திருவாடானை | 200 |
| பிரயாகை | 350 | பழனி | 285 |
| ஹரித்துவார் | 400 | திருப்பெருந்துறை | 140 |
| ரிஷிகேசம் | 400 | ஆக்கூர் | 145 |
| திருக்கேதாரம் | 400 | மாயூரம் | 285 |
| இராமேஸ்வரம் | 500 | வைத்தீஸ்வரன்கோவில் | 200 |
| ஸ்ரீவைகுண்டம் | 360 | சீர்காழி | 140 |
| திருச்செந்தூர் | 140 | ஆச்சாள்புரம் | 300 |
| திருநெல்வேலி | 140 | திருப்பத்தூர் | 200 |
| பழைய பாபநாசம் | 140 | பேரூர் | 220 |
| திருக்குற்றாலம் | 300 | விராலிமலை | 140 |
| காஞ்சீபுரம் | 200 | திருவானைக்கா | 200 |
| திருக்கழுக்குன்றம் | 200 | அவிநாசி | 250 |
| திருக்கச்சூர் | 175 | திருப்பாண்டிக்கொடுமுடி | 250 |
| திருவொற்றியூர் | 140 | பவானி | 200 |
| திருத்தணி | 200 | திருவையாறு | 250 |
| காளஹஸ்தி | 200 | சுவாமிமலை | 200 |
| காவிரிப்பூம்பட்டினம் | 140 | கும்பகோணம் | 350 |
| திருவெண்காடு | 225 | திருவிசநல்லூர் | 200 |
| திருக்கடவூர் | 200 | கஞ்சனூர் | 200 |
| வேதாரண்யம் | 140 | திருவிடைமருதூர் | 140 |
| திருப்புகலூர் | 400 | திருவண்ணாமலை | 500 |
| திருவாரூர் | 200 | திருமாகறல் | 250 |
| நாகப்பட்டினம் | 250 | சென்னை | 150 |
| திருநள்ளாறு | 140 | வடதிருவாலங்காடு | 140 |
| காரைக்கால் | 175 | உத்திரசுவாமிமலை | 140 |
| திருவீழிமிழலை | 150 | திருப்பாதிரிப்புலியூர் | 220 |
| மதுரை | 500 | விருத்தாசலம் | 300 |
| திருப்பரங்குன்றம் | 200 | திருக்கோவலூர் | 140 |
| சிதம்பரம் | 200 | ஆஸ்ராமம் | 200 |
| ஷி. தில்லைவாழந்தணர் | 450 | ஈங்கோய்மலை | 200 |
| கன்னியாகுமரி | 200 | திருப்பனந்தாள் | 5000 |

22-5-81உ வாராணசி ஸ்ரீ குமாரசுவாமிமடத்தில்சாதுக்கள் பண்டாரா

உ

திருச்செந்திலாண்டவன் துணை

ஸ்ரீலஸ்ரீ ஆதி குமரகுருபர சுவாமிகள்

293-ஆம் ஆண்டு

# மகேசுவர பூஜைத் திருநாள்

---

# ஸ்ரீவைகுண்டத்தில் இன்னிசைத் திருமுறை விழா

# 21-5-81

ஸ்ரீ காசிமடம் அதிபர்

ஸ்ரீலஸ்ரீ காசிவாசி முத்துக்குமாரசுவாமித் தம்பிரான் சுவாமிகள்

அவர்களின் அருளாணையின் வண்ணம் நடத்தப் பெறுவது.

ஸ்ரீலஸ்ரீ ஆதிகுமரகுருபரசுவாமிகள் அவதரித்த ஸ்ரீவைகுண்டத்தில் அன்னாரின் மசேஸ்வரபூசைத்திருநாளாகிய 21—5—81 வியாழக் கிழமை மாலை 6மணிக்குத் தொடங்கி இரவுமுழுவதும் திருவீதிவலம் வந்து ஸ்ரீ குமரகுருபரசுவாமிகள் திருக்கோயிலில் நிறைவு செய்யப் பெறும்.

**திருமுறைவாணர்கள்:-**

1. சுரலய இசைவள்ளல்,
   திரு மு. கனகசபைப் பிள்ளை, சிதம்பரம்.
2. திருமுறைக் கலாநிதி
   திரு. M. சுப்பிரமணிய முதலியார், திருவாரூர்.
3. திருமுறைக் கலாநிதி, இசைநம்பி
   திரு. S S. கல்யாணசுந்தர தேசிகர், கும்பகோணம்.
4. சங்கீதபூஷணம்
   திரு. சா. தண்டபாணி தேசிகர், திருபுவனம்.
5. திரு. குருநாதசர்மா பிடில் -- சிதம்பரம்.
6. திரு ஹரிஹரன், (B. Lit.)மிருதங்கம், திருப்பனந்தாள்.

நமரங்காள் வருக !

ஸ்ரீ குமரகுருபரன் சங்கம்

ஸ்ரீவைகுண்டம்

உ.

சொக்கலிங்கம் துணை

# திருநாரையூரில் நம்பியாண்டார் நம்பிகள் நினைவு திருமுறைத் திருவிழா

திருப்பனந்தாள் ஸ்ரீ காசிமடத்து அதிபர்

**ஸ்ரீலஸ்ரீ காசிவாசி முத்துக்குமாரசுவாமித் தம்பிரான் சுவாமிகள் அவர்கள்** அருளாணையின் வண்ணம் நடத்தப்பெறுவது.

துன்மதி ஆண்டு வைகாசித்திங்கள் 23-ஆம் நாள் 5—6—81 வெள்ளிக்கிழமை இரவு 8-மணிக்குத் தொடங்கும்.

**திருமுறைவாணர்கள்**

திருமுறைக் கலாநிதி, சுரலய இசைவள்ளல்

**திரு. M. கனகசபைப் பிள்ளை,**

ஸ்ரீ காசிமடம் சிவசிவ ஒலிமண்டப ஓதுவார், சிதம்பரம்.

திருமுறைக் கலாநிதி

**திரு. M. சுப்பிரமணிய முதலியார்,** திருவாரூர்

தமிழ்மறை இன்னிசைப் பண்மணிகள்

**திரு. T. M. விசுவலிங்கம், சபாபதி சகோதரர்கள்**

திருவாவடுதுறை.

**திரு. குப்புசாமி குருக்கள்**

ஸ்ரீ காசிமடம் கட்டளை ஓதுவார், திருநாரையூர்.

**திரு. குருநாத சர்மா** — வயலின், சிதம்பரம்.

**திரு. கோ, வெங்கட்ராமன்** - மிருதங்கம், திருப்பனந்தாள்

Religious Charities
Tirupanandal

By order of His Holiness
**R. V. சுப்பிரமணியன்,**
மானேசர்

---

குறிப்பு;- திருநாரையூரில் ஒரு ஓதுவார் நியமிக்கப்பெற்று நாடோறும் திருமுறைப் பாராயணம் நடைபெற்று வருகிறது. 6—6—81உ சேக்கிழார் சுவாமிகள் நினைவு நாளில் குன்றத்தூரிலும் தஞ்சை மாவட்டம் திருநாகேஸ்வரத்திலும் நண்பகலில் அன்னம் பாலிப்பு நடைபெறும்.

உ

சிவ சிவ

# தில்லையில்
# பெரிய புராணச் சொற்பொழிவுகள்

திருப்பனந்தாள் ஸ்ரீ காசிமடத்து அதிபர்

ஸ்ரீலஸ்ரீ காசிவாசி முத்துக்குமாரசுவாமித் தம்பிரான் சுவாமிகள்
அவர்கள் அருளாணையின் வண்ணம்
தில்லைத் தமிழ் மன்றத்தினரால் நடத்தப் பெறுவது.

நிகழும் துன்மதி ஆண்டு வைகாசித் திங்கள் 21-ஆம் நாள் முதல் 29 ஆம் நாள் முடிய (3-6-81 முதல் 11-6-81முடிய) தில்லையில் பெரிய புராணச் சொற்பொழிவுகள் நிகழ்ச்சி நிரலிற் காணும் வண்ணம்,

சிதம்பரம் கனகசபை நகர் தருமையாதீனத் திருமடத்தில் நாடோறும் இரவு 7-மணி முதல் 8-30 வரை நிகழும்.

**விரிவுரை நிகழ்த்துவோர்**

1. திரு. அ. பாலசுப்பிரமணியன் அவர்கள்
3-6-81 முதல் 5-6-81 முடிய

2. திருப்பனந்தாள் K.V.S.S. கல்லூரி பேராசிரியர்,
திரு. தா. ம. வெள்ளைவாரணம் அவர்கள்
6-6-81 முதல் 8-6-81 முடிய

3. வித்துவான் திரு. வி. சா. குருசாமி தேசிகர் அவர்கள்
9-6-81 முதல் 11-6-81 முடிய

அன்பர்கள் கேட்டு இன்புறுவார்களாக.

கனகசபைநகர்
சிதம்பரம்
10-5-81

ஆணைப்படி
S. திருநாவுக்கரசு
தில்லைத் தமிழ் மன்றம்

நிகழ்ச்சி நிரல்

திரு. அ. பாலசுப்பிரமணியன், அவர்கள்

1. 3-6-81 புதன் திருமலைச் சருக்கம்

2. 4-6-81 வியாழன் தில்லைவாழந்தணர் சருக்கம்

3. 5-6-81 வெள்ளி இலைமலிந்த சருக்கம்

பேராசிரியர் திரு. தா. ம. வெள்ளைவாரணம் அவர்கள்,

4 6-6-81 சனி மும்மையால் உலகாண்ட சருக்கம்

5. 7-6-81 ஞாயிறு திருநின்ற சருக்கம்

6. 8-6-81 திங்கள் வம்பறு வரிவண்டு சருக்கம்

(திருஞானசம்பந்தர் புராணம்)

வித்துவான் திரு. வி. சா. குருசாமி தேசிகர் M. A., அவர்கள்

7 9-6-81 செவ்வாய் ஏயர்கோன் முதல் சோமாசி நாயனார் முடிய

8. 10-6-81 புதன் வார்கொண்ட வனமுலையார் சருக்கம்

9. 11-6-81 வியாழன் எஞ்சிய ஆறு சருக்கங்கள்

நமச்சிவாய வாழ்க! நாதன் தாள் வாழ்க!

உ
சிவ சிவ

# ஸ்ரீலஸ்ரீ ஆதி குமரகுருபர சுவாமிகள்
293-ஆம் ஆண்டு

# மகேசுவர பூஜைத் திருநாள்

## மதுரையில் இன்னிசைத் திருமுறை விழா

திருப்பனந்தாள் ஸ்ரீ காசிமடத்து அதிபர்

**ஸ்ரீலஸ்ரீ காசிவாசி முத்துக்குமாரசுவாமித் தம்பிரான் சுவாமிகள்**

அவர்கள் அருளாணையின் வண்ணம் நிகழ்த்தப்பெறுவது.

துன்மதி ஆண்டு வைகாசி மாதம் 8-ம் நாள் (21—5—81) வியாழக்கிழமை மதுரை ஸ்ரீ மீனாட்சி அம்மன் கோயில் விநாயகர் சந்நிதியில் இரவு 8மணிக்குத் தொடங்கிச் சிவம்பெருக்கும் பிள்ளையார் தங்கியருளிய ஆவணி மூல நான்கு வீதிகளில் இரவு முழுவதும் திருமுறைவாணர்கள் திருமுறையோதி, காலை 6-மணிக்கு ஸ்ரீ மீனாட்சியம்மை சன்னதியில் பூர்த்தி செய்வார்கள்.

திருமுறை வாணர்கள் :-

சங்கீத பூஷணம், கலைமாமணி

1 தருமபுரம், திரு. P. சாமிநாத முதலியார், சென்னை.

தமிழ்மறை இன்னிசைப் பண்மணிகள்

2 திரு. T. M. விசுவலிங்கம், சபாபதி சகோதரர்கள், திருவாவடுதுறை.

3 தேவாரமணி திரு. S. சயிலப்ப ஓதுவார், ஸ்ரீ காசிமடம் கட்டளை ஒதுவார், மதுரை.

4 தேவார இசைமணி திரு. S. முத்துக்கந்தசாமி தேசிகர், ஸ்ரீ காசிமடம் கட்டளை ஒதுவார், திருச்சி.

திருநெறிய தமிழ்மணி

5 திரு. த. குருசாமி தேசிகர், மதுரை.

6 திரு. எஸ். ஏ. கோபாலன், வேய்ங்குழல், சிதம்பரம்.

7 திரு. T. K. சுப்பராமன், பிடில், மதுரை.

8 திரு. கோ. வெங்கட்ராமன், மிருதங்கம், திருப்பனந்தாள்

ஆணைப்படி,

முத்து. மெய்கண்டதேவன்,
மானேசர்.

ஸ்ரீ காசிமடம்
திருப்பனந்தாள்
10—5—81

# சிதம்பரச் செய்யுட்கோவை

A String verses on Chidambaram
By Kumaragurupara Swamigal
Translated into English by K. M. Venkataramiah

Vinayaka has hill - like tusks and contentius trunk;
He has spots on His face;
He sighted the impression made by the warring
mountain - like breasts (of Uma) on your chest;
He thought —
"While I ran and played in my young age,
On your mountain like and drum like shoulders
My destructive trunk would have hurt you!
And he became confused in mind.

அதா அன்று - not only that

௩. விடம் ஆர்ந்த சுடர் இலைவேல் விடலைநின் மணிமார்பில்
வடம் ஆர்ந்த முலைச்சுவட்டைக் கண்டு தன் பருப்பு எந்தை
தடமார்பம் விடர்செய்யச் சமர்செய்தான் கொல் என்று
கடம்ஆர் வெம்கவுள் சிறுகண் கயாசுரனை வியக்குமால்.

The Lad (Muruga) holds the effulgent spear
poisonous;
He sighted on your chest —
— the mark of the breasts adormed with stringed
jewels
He thought —
"While Gajasura fought with my Father,
He would have priereed his tusk,
And made a cavity in His chest"
And he admired Gajasura
— having must exuding temple and small eyes;

# இருந்தாடும் காரணம்

கி. வா. ஜகந்நாதன்

தியாகப் பெருமான் சிங்காதனத்தில் அமர்ந்தபடியே ஆடுகிருன். அதனுல் அவனை இருந்தாடமுகன் என்று சொல்வார்கள். நின்றுகொண்டு காலைத் தூக்கி நடனமிடுவதுதான் பெரும்பாலான வழக்கம். ஆனல் யாகேசன் இருந்தபடியே ஆடுகிருன். அந்த நடனம் பார்ப்பதற்குக் கண் கொள்ளாக் காட்சியாக இருக்கும்.

ஆரூர்ப் பெருமான் எதற்காக இப்படி அமர்ந்தபடியே ஆடுகிருன்? இந்தக் கேள்வியைக் குமரகுருபர முனிவர் தம் மனத்தில் எழுப்பிக்கொண்டார். அதற்கு உரியகாரணம் எதுவாக இருக்கும்? இரண்டுகாரணங்கள் அவருக்குத் தோன்றுகின்றன. அவற்றைச் சொல்லி, ''இந்தக் காரணங்களில் எது உன்னுடைய திருவுள்ளத்தில் கொண்டது? இவை இரண்டுமே அல்லாவிட்டால் வேறு என்ன காரணம்? அதைத் திருவாய் மலர்ந்தருள வேண்டும்'' என்று விண்ணப்பித்துக்கொள்கிருர்.

திருவாரூர்ப் பெருமானைப்பார்த்துப்பேசுகிருர். ஆரூரில் எங்கும்அழகிய காட்சிகள் நிரம்பியுள்ளன. பூங்கோயிலே அற்புதமான வடிவம் உடையது. அங்கே வந்து பக்தர்கள் வணங்கி உருகி இறைவனைத்துதித்துப் பரவசமாகி நிற்பதை மற்ற இடங்களிலே பார்க்க முடியாது. நிச்சயமாகத் தேவலோகத்தில் இந்தக் காட்சியைக் காணமுடியாது. அங்குள்ள தேவர்கள் இங்கே வந்து இந்தப் புதுமைக் காட்சிகளைக் கண்டு வியக்கிருர்கள். இதைச் சொல்கிருர் முனிவர்:

விண்ணோர்
விருந்து ஆகும் ஆருரா!

'' நீ நின் திருத்தாளைத் தூக்கி நின்று ஆடாமல் அமர்ந்தபடியே ஆடுகிருயே, நின்று ஆடினுல் நின்தூக்கிய திருவடியைக் கண்டு, திருமால் அதைக் காணுமல் அமர்ந்திருந்ததால், ''நான் திருவடியைக் கண்டுவிட்டேன்!'' என்று இப்போது சொல்வான் என்று எண்ணியோ அப்படிச் செய்ய வில்லை? தானே முயன்று திருவடியைக் கண்டு விட்டவரைப் போல அவர் பொய்ச்

சத்தியம் செய்யக் கூடும் என்ற எண்ணத்தைக் கொண்டோ இப்படி ஆடுகிருய்?''

கண்ணனுர் பொய்ச்சூள்
கடைபிடித்தோ?

''அல்லது, நீ திருவடிதூக்குவதைக் கண்டு, முன்பு அதனுல் உதைப்பட்ட தென்திசையில் இருக்கும் யமன் அஞ்சுவான் என்று நீ அஞ்சியோ இருந்தாடுகிருய்?''

தென்புலத்தார்
அண்ணலார் அஞ்சுவர் என்று
அஞ்சியே ?

நாம் எந்தத்தவறும் இப்போது செய்யவில்லையே! சிவனடியார்கள் பக்கமே போவதில்லையே! அப்படியிருக்க இந்தப் பெருமான் காலைத்தூக்குகிருரே! நம்மை உதைக்கத்தான் எண்ணுகிருரோ, என்று யமன் அஞ்சுவான்.

''இப்படி இரண்டு காரணங்கள் எனக்குத் தோன்றுகின்றன; ஆனுலும் உறுதியாக இதுதான் என்று வரையறுத்துச் சொல்ல முடியாது. இந்த இரண்டு காரணங்களும் அல்லாமல் வேறு காரணமும் இருக்கலாம். உண்மையான காரணம் எது?'' என்று கேட்கிருர் முனிவர்.

மென்மலர்த்தாள் தூக்காது
இருந்துஆடு கின்றவா என்?

திருமாலினுடைய மார்பில் அமர்ந்து அவருடைய உச்சுவாச நிச்சுவாசத்துக்கு ஏற்ப அசைந்து ஆடிய பெருமான் தியாகேசன்: திருமால் அஜபாமந்திரத்தை மூச்சை இழுத்தும் வெளியிட்டும் ஜபித்தார். அதனுல் அவர்மார்பு வீங்கித் தணிந்தது. அவர் திருமார்பில் இருந்த தியாகப்பெருமான் அந்த ஏற்ற இறக்கத்துக்குத் தக்கபடி அசைந்து ஆடினுர்: இதை அஜபா நடனம் என்றும் சொல்வதுண்டு.

கண்ணனுர் பொய்ச்சூள்
கடைப்பிடித்தோ? தென்புலத்தார்
அண்ணலார் அஞ்சுவர் என்று
அஞ்சியோ? -விண்ணோர்
விருந்துஆகும் ஆரூரா,
மென்மலர்த்தாள் தூக்காது
இருந்து ஆடு கின்றவா என்?

தேவர்கள் வந்து பல புதுமைகளைக் கண்டு அனுபவிக்கும் திருவாரூரில் எழுந்தருளியிருக்கும் தியாகப்பெருமானே நின்னுடைய மென்மையான மலரைப்போன்ற திருவடியைத் தூக்கி நின்று நடனம் செய்யாமல், அமர்ந்தபடியே ஆடுகின்றது, திருமால் 'நான் முயன்று கண்டேன்' என்று பொய்ச் சத்தியம் செய்வார் என்பதை உள்ளத்திற் கொண்டோ? அல்லது, தென்திசையில் உள்ள பிதிர்தேவதைகளின் தலைவராகிய யமதருமர், நம்மை உதைக்கத்

திருவடியைப் பெருமான் தூக்கு கிறரோ? என்று அஞ்சுவார் என்று அஞ்சியோ? என்ன காரணம்?

கண்ணனுர் என்றது இங்கே கிருஷ்ணனைக் குறிக்காமல் திருமாலைக் குறித்தது; கரிய நிறம் உடையவன் என்பது பொருள், பொய்ச் சூள் - நானே முயன்று கண்டுவிட்டேன் என்று கூறும் பொய்ச்சத்தியம்; சூள் - உறுதிமொழி. கடைபிடித்தோ - உறுதியாக எண்ணியோ. தென்புலத்தார்-பிதிர் தேவதைகள். அவர்களுடைய அண்ணலார் என்றது யமனை. கண்ணனுர், அண்ணலார் என்பன உயர்வாகச் சொன்ன படி; இழிவுக் குறிப்புமாம். அஞ்சியோ - பாவம், வீணுக அவனுக்கு அச்சத்தை உண்டாக்கு வானேன் என்று பயந்தோ? பெரியோர்கள் ஏதேனும் வருமோ என்று அஞ்சாமல், பிறருக்குத் தீங்கு வருமோ என்று அஞ்சுவார்கள்.

விருந்து ஆகும் - புதுமைக் காட்சிகளை அநுபவிக்கும்; விருந்து - புதுமை. பெரும்பாலான நடனங்களில் தாளைத் தூக்கி ஆடுவதே வழக்கம். 'அவ்வாறு ஆடாமல் வீற்றிருந்த படியே ஆடுவது புதுமையாக இருக்கிறது. இதற்கு என்ன காரணம்?' என்று கேட்கிறுர். ஆடுகின்றவா - ஆடுகின்றவாறு; செய்யுள் விகாரம், என் - என்ன காரணம். 'இருந்து ஆடுகின்றவாறு கடைப்பிடித்தோ, அஞ்சியோ என்!' என்று கூட்டிப் பொருள் செய்க.

இது திருவாரூர் நான்மணி மாலையில் உள்ள 18-வது பாட்டு.

# திருவாசகமும் நாட்டுப்புற மரபுகளும்

கு. அழகேசன், மதுரை.

தோணோக்கம் போல நாட்டுப் புறங்களில்அருகிக் காணப்படும் கலைகள் பல உண்டு. ஒயிலாட்டம் புலியாட்டம் என்பன அவற்றுள் சில. இதனைப்பற்றி ஒரு நாட்டுப் பாடல் பாமரர் இடத்தும் படித் தாரிடத்தும் பயிலுகிறது.

சிறகை விரித்தால் மயிலாட்டம்
சேர்ந்து குதித்தால் ஒயிலாட்டம்
சீறிப்பாய்ந்தால் புலியாட்டம்
திரையில் மறைந்தால் நிழலாட்டம்

எனக் குறிப்பிடுகிறது. மேற் குறித்த ஆட்டங்கள் இறைவனுக் காக அடித்தொண்டர்கள் வேட மிட்டு ஆடுவனவற்றைக்குறிக்கும். இறைவனையே பொன்னூஞ்சலில் அமர்த்துவது திருப்பொன்னுச லாகப் பெயர் சூட்டப்படும்.

இதுபோன்ற ஆட்டங்கள் தமிழ கத்துத் தெருச்சந்தியில் விழாக் காலங்களில் நடைபெறும். குறிப் பாகத் தென்ஆர்க்காடு மாவட்டத் தைச் சார்ந்த திட்டகுடியில் படு களத் திருவிழாவின்போது இத் தகைய ஆட்டங்கள் நடத்தப் பெறுகின்றன.

மாணிக்கவாசகரது படைப்புக் களில் ஊஞ்சலாட்டம் என்னும் திருப்பொன்னூசல் இறைத் தன்மையோடு இசைக்கப்படு கிறது. இறைவனின் அருமை பெருமைகளைச் சொல்லி

'எங்கள் பிறப்பறுத்திட்டானை'
'மாலுக்கரியானை'
'வாயார நாம்பாடி'
பொன்னூசல் ஆடாமோ'

என்னும் கிராமியக் கண்ணோடு சமய உணர்வுகளைத் தழுவச் செய்திருக்கிறார்.

இதுபோன்ற நாட்டுப்புற பழக்க வழக்கங்கள் இந்நாளில் பரவலாக இலங்கவில்லை என்று லும் கூட அவற்றை, சமுதாயத் தின் உயிர்த்துடிப்புக்களாகக் கொள்ளல் வேண்டும். எழுத்து வடிவம் இல்லை என்றாலும் நாட்டுப்புற மரபுகள், வாய்வழி யாக நிலைபேறுத்தன்மை அடைய முடியும். அதனால்தான் பக்திப் பாசுரங்களைப் பாடிய மணிவாச கர் இறையருளைக் குழைப்பதற் குரிய கலவையாக நாட்டுப்புறக் கூறுகளைத் தேர்ந்தெடுத்தார்.

இதுவரை சொல்லிய நாட்டுப் புற மரபுகளோடு சாழல், கோத் தும்பி, தெள்ளேனம், உந்திபற, குயில்பத்து என்னும் கூறுகளைப் பற்றிய விளக்கங்களும் திருவாச கத்தில் காணப்படுகின்றது.

ஒருத்தி சந்தேகம் கொண்ட வள் போல ஒரு கேள்வியைக் கேட்பாள். அதற்கு இன்னொ ருத்தி விடை சொல்வாள். இவ் வாறு 'சொல்விளையாட்டு' நிகழ்த் தும் மகளிர்வழக்கத்தைத் திருச் சாழல் எனக் குறிப்பிட்டுள்ளார்.

கோயில் சுடுகாடு கொல்புலித்தோல்
நல்லாடை
தாயுமிலி தந்தையிலி தான்தனியன்
காணேடீ!

—என ஒருத்தி வினவ -
அதற்கு மற்ருெருத்தி

தாயுமிலி தந்தையிலி தான்தனியன்
ஆயிடினும்
காயில் உலகனைத்தும் கற்பொடி காண்
சாழலோ-என்றவாறு

எதிர் உரைப்பாள். சங்க இலக்கியங்களில் இதுபோன்ற அமைப்புடைய வடிவங்கள் இருக்கின்றன என்ருலும் கூட சமய இலக்கியத்தில்அதற்கெனத் தனியாகப் பதிகம் பாடிய முறை மாணிக்கவாசகருக்கே உரிய திறனாகும்.

இருவர் சேர்ந்துபாடும் இயல்பு கொண்ட சாழல் மரபுடைய பாடல்கள் கிராமப்புறங்களில் வழக்காற்றில் உண்டு. குழந்தை அழுவதைக் கண்டாள் ஒருத்தி.

மாமன் அடிச்சாரோ மல்லிகைப்
பூச்செண்டாலே
அத்தை அடித்தாளோ அல்லிமலர்ச்
செண்டாலே

அடித்தாரைச் சொல்லி அழு
ஆக்கினைகள் செய்துவைப்போம்
தொட்டாரைச் சொல்லி அழு
தோள்விலங்கு போட்டுவைப்போம்.

என்றவாறு வினவுகிறள். இக்கேள்வியைக் கேட்டவுடன்

ஆரும் அடிக்கவில்லை ஐவிரலும்
தீண்டவில்லை
தானே அழுகின்ருன் தம்பிதுணை
வேணுமென்று
அவனு அழுகின்ருன் ஆத்தாள்
மடிதேடி

என்றவாறு வினுவுக்குரிய விடை எதிர்முகாமிலிருந்துவெளிப்படும்: இதுபோன்ற நெறியுடையபாடல்கள் எண்ணிறந்தவாறு நாட்டுப்புறத்து மக்களால் நகைப்போடு சொல்லப்பட்டுவருகின்றன. மேற்குறித்த பாடல் பிற்காலப்பாடல் மாணிக்கவாசகரின் 'திருச்சாழல் திருவுந்தியார், என்னும் தொட்டில்களில் வளர்ந்த பிள்ளைகளே மேற்குறித்த பாடல் வரிகள்.

குயிற்பத்து, திருத்தசாங்கம், கோத்தும்பி, என்னும் பதிகங்களை ஆழ்ந்து நோக்கினல் அவைகளும் ஒரு நெறியான பழக்க முறைகளுக்கு ஆட்பட்டதை அடையாளங் காணமுடியும்.

காதலனைப் பிரிந்த தலைவி அவனைக் காணல் வேண்டி நிலவு மேகம், குயில் ஆகியவற்றைத் தூதுவிடுவது ஒரு மரபு. இந்நாளில் செருப்பைத் தூதுவிட்ட தாசச்செருப்பு விடுதூது என்னும் நூல் கூறுகிறது. நாட்டுப்புற மரபுகளின் மீது நாட்டங்கொண்டவர் மணிவாசகர் என்பதால் கிளியும், குயிலும், தும்பியும் திருவாசகத்தில் தூதுபோகுமாறு தமது படைப்புக்களை அரங்கேற்றம் செய்துள்ளார்.

கீதமினிய குயிலே, நிலவுருவிற்
குயிலே; இன்பந்தருவன் குயிலே
உன்னை உகப்பன் குயிலே. இதுகேள்
மனிதரை ஆட்கொண்ட வள்ளலை
நீ வரக் கூவுவாய்

சுதந்திர இன்பக் குயிலே தென்பாண்டி
நாடானை வரக்கூவாய்.
இளங்கிளியே, ஏதமிலா இன்சொல்
மரகதமே
பெருந்துறைக்கோன், மலைபகராய்,
ஆறுஉரையாய்
படைபகராய், முரசியம்பாய், கொடி
கூறுய்

என்றவாறு அரசனுக்குரிய பெயர், ஊர், நாடு, மலை, படை முதலிய பத்து அங்கங்களையும் கிளியிடம் முன்னிலைப்படுத்தி ஒ:த்தி பேசுகின்றனள்.

இவ்வாறு பேசாததைப் பேசுந போலவும் கேட்காததைக் கேட்குநபோலவும் அமைத்தற்குரிய அடிச்சுவடுகள் சங்க இலக்கியத்தில்பரவலாக வரப்பெறுகின்றன.

குற்றுலக்குறவஞ்சியில் வெண்ணிலாவைப் பார்த்து ஒருத்தி,

தன்மதியுடன் பிறந்தாய் வெண்ணி
லாவே-அந்தத்
தண்ணளியை ஏன்மறந்தாய் வெண்ணி
லாவே

எனக் கோபங் கொண்டு நிலவோடு பேசுகிறுள். 11ஆம் நூற்றுண்டில் 'புறப்பாட்டு' என்னும் இலக்கியம் தோன்றியது. காதல் நோயால் வாடும் ஒருத்தி, குருவி வழியாகத் தன்நிலையைக் காதலனுக்குத் தெரியப்படுத்தினுள் எனப் புறப்பாட்டு கூறுகிறது.

பொதுவாக, காதல் இலக்கியம் எதுவானுலும் எந்த நூற்றுண்டில் எழும்பியிருந்தாலும் இந்த வகை உத்தியைப் பெரும்பாலும் பின்பற்றியிருக்கும். நாட்டுப்புறங்களிலும் இதுபோலத் தூதுவிடும் நிகழ்ச்சி காதல் நோயால் வாட்டமுற்றுரிடத்து மனவழியால் பரிமாறிக் கொள்ளப்படுகிறது.

உணர்வுகள் எக்காலத்திற்கும், பொதுவானவை. எனவேதான் இவ்வுணர்வை இறைவன் மீது ஒருத்தி காதல்வயப்பட்டாள் எனக் காட்டி, அதற்கவள் தும்பி, கிளி, குயில் ஆகியனவற்றை அடிமனவுணர்வுகளின் வெளிப்பாடாய்த் தூதுபோகச் செய்தாள் என மாணிக்கவாசகர் குறிப்பிட்டுள்ளார்.

இக்கருத்தினைத் திருவாசகத்துள் குயிற்பத்து, தசாங்கம், கோத்தும்பி என்னும் பதிகங்களின் வழி அறியலாம்.

நாட்டுப்புறப்பாடல் மரபில் ஓர் இலக்கியம் முகிழ்க்க வேண்டுமானுல் அது கிராமியச் சூழலில் பின்னப்பட்டிருக்க வேண்டும். அவ்வாறு உருவாக்கம் பெறும்போது அதன்கண் அமைந்துள்ள சொல்லாட்சி பேச்சு வழக்கில் அமைய வேண்டும்.

திருவாசகத்தில் பித்தன், பித்தேற்றி போன்ற சொற்கள் பிச்சன் பிச்சேற்றி என்பனவாகவும்; வாராமல், போகாமல் என்று வரும்சொற்கள் வராம, போகாமெ- என்றவாறு எளிய

நடையில் இயற்றப் பட்டுள்ளன:

கிராமியச்சூழலோடு நாட்டுப் புற மரபுகளைப்பாடுபவர்மாணிக்க வாசகர் என்பதற்கு மேலும் ஒரு எடுத்துக் காட்டு உண்டு.

'அறுகெடுப்பார் அயனும் அரியும்' -என்ற வரி பொற்சுண் ணத்தில் காட்டப்படுகி றது. 'உலக்கை பல ஓச்சுவார்,' -என்னும் வரியும் திருவாசகத்துள் அமைந்துள்ளது. அறுகெடுத்தல் என்னும் கலைச் சொல்லை ஆராய்ச்சி செய்தால் மாணிக்க வாசகரின் நாட்டுப்புற உணர்வு களை நன்ருக அடையாளங் காண முடியும்.

இறைவன் நீராடச் செல்லும் பொழுது வழியில் இருமருங்கும் அறுக மலர்களைத் தூவும் பொருட்டு அவற்றை எடுத்தல் 'அறுகெடுத்தல்' -என அழைக் கப்பெறும்.

வெளிநாட்டார், ஆளுநர், குடியரசுத்தலைவர் -ஆகியோர் குறிப்பிட்ட சில இடங்களில் விஜயம் செய்கிற போது பாதை முழுக்கக் கம்பளம் விரிக்கும் வழக் கம் இன்று காணப்படுகிறது. அறுகு எடுத்தல் என்னும் நாட்டுப் புறச் செயலுக்கு நவீனச் சாயம் பூசிய செய்கையே இது.

கல்வெட்டுக்களிலும் பாமரர் களின் பேச்சு வழக்கிலும் இதனை 'நடைபாவாடை' விரித்தல் என் னும் சொற்களால் நம்முன்னோர் கள் உணர்த்திச் சென்றுள்ளனர். சில நேரங்களில் சிலருக்காக அறு கையும் நெல்லையும் சிந்துதல் மங் கல நிகழ்வாக மதிக்கப்பட்டன. கடலாடு காதையில் இந்நிகழ்வை இளங்கோவடிகள் குறிப்பிட் டுள்ளார். மக்களுள் சிறந் தோர் வீதிஉலா வரும்போது மங்கலமாய்ச் சிந்தும் இவ்வழக் கத்தை மாணிக்கவாசகர் 'திருப் பொற்சுண்ணம்' என்னும் பதிகத் தால் புலப்படுத்தியுள்ளார்.

இப்படியாக, திருவாசகத் தின் அடிப்படையான பாடல் களை நாட்டுப்பாடல் மரபோடு இலங்க வைத்த கவிஞரின் நெறி போற்றுதலுக்குரியதாகும்.

சிலம்பம், சடுகுடு, பச்சைக் குதிரை, கிளித்தட்டு, நிலாப் பூச்சி, கழைக்கூத்து, நொண்டி, விளையாட்டு, தெள்ளேனம் என்று அழைக்கப்படும் தெம்மாங்கு, தாயம், பல்லாங்குழி, கண்ணும் பூச்சி, ஒத்தையா இரட்டையா, கிட்டி, பொம்மலை, குயிற்பத்து, திருத்தசாங்கம் ஆகியன மகளிர்க் குரிய நாட்டுப்புற விளையாட்டு களாக கருதப்பட்டன. இவற்றுள் பலவற்றை விரித்தும் சிலவற்றை விடுத்தும் மாணிக்கவாசகர் விளக்கியுள்ளார்

அதுவும் தாமியற்றிய பக்திப் பாசுரத்துள்......

அரிய பெரிய சமய உண்மைகளைக் கூறுமிடத்து......

நாட்டுப் பாடல் மரபில் அமையும் செய்திக் கோவைகளுக்குத் தனி யிடம் திருவாசகத்துள் ஒதுக்கி யுள்ளார் என்பதை நினைக்கும் போது மாணிக்கவாசகரை உண் மையில் தமிழ்க் காதலர்கள் வாழ்த்தவேண்டும்.

# போற்றிப் பஃறொடை

தெளிவுரை :
கு. சுந்தரமூர்த்தி எம். ஏ. திருப்பனந்தாள்.

**78.** மேதக்கோர்

செய்யும் சரியை கிரியா யோகத்தால்
எய்துஞ்சீர் முத்திபதம் எய்துவித்து - மெய்யன்பன்பால்
காணத் தகுவார்கள் கண்டால் தமைப்பின்பு
நாணத் தகும்ஞான நன்னெறியை - வீணே
எனக்குத் தரவேண்டி எல்லாப் பொருட்கும்
மனக்கும் மலரயன் மால் வானோர் - நினைப்பினுக்கும்
தூரம்போலே அணிய சுந்தரத்தாள் என்தலைமேல்
ஆரும்படி தந்து அருள்செய்த - பேராளன்
தந்தபொருள் ஏதென்னில் தான்வேறு நான் வேறாய்
வந்து புணரா வழக்காக்கி-முந்திஎன்தன்
உள்ளங் என்றும் நீங்காது ஒளிந்திருந்து தோன்றி நிற்கும்
கள்ளம் இன்று காட்டும் கழல் போற்றி

(தெ - ரை) தகுதியுடையோர் செய்யும் சரியை, கிரியை, யோக நெறிகளுக்கு அவ்வவ்வற்றிற்கும் உரிய பத முத்திகளைக் கொடுத்து உண்மையான பேரன்பால் தன்னைக் காண விரும்புவார் தம்மைக் கண்டு காணு முன்னுள்ள தமது நிலையை உணர்ந்து நாணுமாறு நல்கும் ஞானச் செந்நெறியைத் தகுதியில்லாத எனக்கும் தர எண்ணி எல்லாப் பொருள்களுக்கும், மனத்துக்கும், தாமரைமலரில் எழுந்தருளி யிருக்கும் அயன், திருமால், முதலாய தேவர்களின் நினைவிற்கும் சேய்மைஉடையோன் போல் நின்றும் அனைத்துப் பொருள்களிடத்தும் இடையீடின்றிக் கலந்து நிற்கும் அவனது அழகிய திருவடிகளை இழிந்த எனது தலைமீதும் சூட்டியருளிப் பேரருளை வழங்கியருளிய பெருந்தகையோன் வழங்கிய பொருள் யாதென்னில், தான் வேறு நான்வேறாய் இருந்து இதுபொழுது பொருந்தினதில்லை என்னும் வாய்மையை அறிவுறுத்தி காலப் பழமைக்கெட்டாத காலத்திலேயே உன்னிடத்தில் ஒளிந்திருந்து நீ நம்மைக் காணுதிருக்க நாம் உன்னைக் கண்டு கொண்டிருந்தோம் என்னும் கள்ளத் தன்மையை அறிவித்து நிற்கும் திருவடிகளுக்கு வணக்கம்.

சரியை கிரியை யோகம் ஆகிய மூன்றற்கும் உரிய பேறு பத முத்தியாகும்; அவற்றின் பயனாகக் கிடைக்கும் ஞானத்திற்குப் பயன் வீடு பேறாகும். இவற்றின் இயல்பையும் பயனையும் சிவஞான சித்தியார் மிகத் தெளிவாக விளக்கும். ஞானம் பெறுமுன்பு இருந்த அறியாமை ஞானம் பெற்ற பின்பு விளங்குதலின் அதன் முன்னைய

நிலை நாணுதற்கு உரியதாயிற்று. அறிதோறும் அறியாமை கண்டற்றால்' என அறநூல் நுவலுவதும் காண்க. மாலயன் முதலியோர்க்கு சேயனாய் நிற்பதும் இல்லை. ஏனையோர்க்கு அணித்தாய் நிற்பதும் இல்லை. தன்முனைப்பற்ற நிலையில் விளங்கியும் அஃது அற்ற நிலையில் மறைந்தும் இருப்பதே இறைவனின் உண்மை நிலை ஆகும். ஆதலின் 'தூரம்போல அணிய சுந்தரத்தாள்' என்றார். பிறவிப் பிணிக்கு மருந்தாய் நிற்கும் அழகு தோன்றச் 'சுந்தரத்தாள்' என்றார். இறைவனை விடுத்து உயிரும், உயிரை விடுத்து இறைவனும் என்றும் நிற்பதில்லை. அவன் அருள்வழிப் பட்டக்கால் உணர்ந்தும் அஃது இல்வழி உணராதும் இருப்பது உயிரின் இயற்கை யாகும். இவ்வுண்மை அவன் அருள்வழிப் பட்டபொழுதே விளங்குதலின் அதற்கு முன் இறைவன் நிற்கும் நிலையைக் 'கள்ளம்' என்றார்.

84. வள்ளமையால்

தன்னைத் தெரிவித்துத் தன்தாளின் உட்கிடந்த
என்னைத் தெரிவித்த எல்லையின்கண் - மின் ஆரும்
வண்ணம் உருவம் மருவும் குணமயக்கம்
எண்ணும் கலைகாலம் எப்பொருளும் – முன்னம் எனக்கு
இல்லாமை காட்டிப் பின்பு எய்தியவா காட்டி இனிச்
செல்லாமை காட்டும் செயல் போற்றி

(தெ-ரை) தனது மிகு கருணையினால் தன்னை எனக்குணர்த்தித் தனது திருவடிக்கீழ் அடங்கி நிற்கும் என்னை உணர்த்திய அமையத்தே, மின்னல் எனத் தோன்றி அழிகிற உடலும், அதைப் பொருந்திய குண மயக்கங்களும், அறிவு விளக்கம் தந்து நின்ற கலை, காலம் முதலிய தத்துவங்களும் எனக்கு முன் இல்லாத தனி நிலை (கேவலம்) யையும் காட்டி, பின் அவையனைத்தும் எய்திய கட்டு நிலை (சகலம்) யையும் காட்டி, இனி அப்பொருள்களினோடு கூடாத தூய (சுத்து) நிலையையும் காட்டி அருளிய செயல் திறத்திற்கு வணக்கம்

கருவி கரணங்களுடன் கூட்டப் படாத நிலையைத் தனிநிலை என்றும், அவற்றோடு கூட்டப் பட்ட நிலையைக் கட்டுநிலை என்றும், மேலும் அவற்றோடு கூட்டப்படாத நிலையைத் தூயநிலை என்றும் கூறுவர்.

87. எல்லாம் போய்த்

தம்மைத் தெளிந்தாராய்த் தாமே பொருள்ஆகி
எம்மைப் புறம்கூறி இன்புற்றுச் - செம்மை
அவிகாரம் பேசும் அகம்பிரமக் காரர்
வெளியாம் இருளில் விடாதே – ஒளியாய் நீ
நின்ற நிலையே நிகழ்த்தி ஒருபொருள்வேறு
இன்றியமை யாமை எடுத்து ஓதி - ஒன்றாகச்
சாதித்துத் தம்மைச் சிவமாக்கி இப்பிறவிப்
பேதம் தனில் இன்பப் பேதம்உறுப்–பாதகரோடு
ஏகமாய்ப் போகாமல் எவ்விடத்தும் காட்சிதந்து
போகமாம் பொன்தாளின் உள்புணர்த்தி – ஆதியுடன்
நிற்க அழியா நிலைஇதுவே என்றருளி
ஒக்க வியாபகம்தன் உள் காட்டி - மிக்கோங்கும்
ஆனந்த மாக்கடலில் ஆரா அமுதுஅளித்துத்
தான்வந்து செய்யும் தகுதியினால் - ஊன்உயிர்தான்
முன்கண்ட காலத்தும் நீங்காத முன்னோனை
என்கொண்டு போற்றிசைப்பேன் யான்.

(தெ–ரை) எல்லாப் பொருள்களும் பொய் என்று கண்டு அவற்றின் நீங்கித் தெளிந்தோம் என்றும், தமக்கு மேம்பட்ட பொருள் ஒன்று இல்லை என்றும், சைவசித்தாந்தச் செந்நெறி தமக்குப் புறம் என்றும் கூறி அவற்றால் மகிழ்ந்து முதல்வனைப் போன்றே தமக்கும் விகாரம் இல்லை என்று கூறித்தாமே பிரமம் என்பாரது வெளிப்படையான இருள்நெறியில் என்னை விடாது, அறிவாய்த் தான் நிற்கும் நிலையையும் உணர்த்தி, ஒப்பற்ற பொருளாக விளங்கும் தனது இன்றியமையாமையை எடுத்து உணர்த்தித் தாம் இறைவனோடு ஒன்றுவோம்என்றும், தாமே சிவம் என்றும் கூறி இப்பிறவியிலேயே பேரின்பப் பெருவாழ்வைப் பெற்று மகிழாத சிவசமவாதம் கூறும் இழிதகைமையாரோடு ஒன்றாதவாறு யாண்டும் நீக்கமற நிற்கும் நிலை காட்டி, பேரின்பப் பெருவாழ்வை வழங்கியருளும் அழகிய திருவடியின்கண் ஆட்படுத்தித் திருவருளில் கலந்து நிற்கும்நிலை இதுவேஎன்று அருளி, தனதறிவுள் எனதறிவு அடங்கி நிற்குமாறு காட்டி மேலாக விளங்கும் பேரின்பக் கடலில் உளதாகிய அமுதத்தைத் தானே வந்து வழங்கியருளிக் காத்தருளும் தகுதியோடு, முன் உடல் கருவிகளொடு கூடிக் கட்டுண்டு கிடந்த காலத்தும் என்னை விட்டு நீங்காது காத்தருளிய முதல்வனை எவ்வாறு யான் புகழ்ந்து போற்றுவேன்?

வெளியாம் இருளில் - வெளிபோன்று கருதத்தகும் இருளில். ஒளியாய் – அறிவாய். உயிர் இறையடிக் கீழ் இருந்து பேரின்பப் பெருவாழ்வைப் பெறுவதே சைவசித்தாந்தம் கூறும் வீடுபேருகும். 'சிவனடியைச் சேருமுத்தி செப்புவது இங்கு யாமே' எனக் கூறுமாற்ருன் இவ்வுண்மையை அறியலாம்.

போற்றி திருத்தில்லை போற்றி சிவபோசம்
போற்றிஅவன் மெய்ஞ்ஞானப் புண்ணியநூல் - போற்றிஎங்கள்
வெம்பந்த வாழ்க்கைவிட வேருய்வந்து உள்நின்ற
சம்பந்த மாமுனிபொன் தாள்.

(தெ-ரை) அழகிய தில்லை நகருக்கு வணக்கம் இறைவன் தந்த ஞானம் நுகர்விற்கு வணக்கம். அவனது பொருள்சேர் புகழைக் கூறும் புண்ணியம் சிறந்த மெய்நூல்களுக்கு வணக்கம். கொடிய உலகியல் பற்றை விடுதற்கு என்னுள் வேருய் நின்றும் தன் கருணையினுல் என் உள்புகுந்து ஆட்கொண்ட மறைஞானசம்பந்தர் என்னும் பெருமுனிவரின் அழகிய திருவடிகளுக்கு வணக்கம்.

தாம் ஞானம் பெறுதற்கு ஏதுவாய் அமைந்திருந்த இடம் தில்லை யாதலானும், தம் வழிபடு கடவுளாய கூத்தப்பெருமான் எழுந்தருளியிருக்கும் இடம் அதுவாதலானும் தில்லைக்கு வணக்கம் கூறினுர். மெய்யுணர்வின் பயனுகப் பெற்ற ஞானம் வீடுபேற்றிற்கு ஆளாக்குதலின் அடுத்து அதற்கு வணக்கம் கூறினுர். ஞான நூல்தனை ஓதல் ஓதுவித்தல் முதலாயின இறைவனடி அடைவிக்கும் எழில் ஞான பூசை ஆதலின் அம் மெய்நூல்களுக்கு வணக்கம் கூறினுர். இத்தனைக்கும் காரணமாய் இருந்தவர் தமது ஒரு முதல்வராதலின் அவர்தம் திருவடிகளுக்கு வணக்கம் கூறினுர்.

போற்றிப் பஃறெருடை நிறைவுற்றது.

# திருத்தலயாத்திரை - திருப்பந்தணை நல்லூர்

வித்துவான். பொன். முருகையன்,
திருப்பனந்தாள்.

இது சோழநாட்டில் காவிரியின் வடக்கே உள்ள தலங்களில் ஒன்று. இவ்வூர் கும்பகோணத்திலிருந்து வடகிழக்கே பதினெட்டு கல் தொலைவில் அமைந்துள்ளது. மாயூரத்திலிருந்து குற்றாலம் வழியாகவும், கும்பகோணத்திலிருந்து திருப்பனந்தாள் வழியாகவும் பேருந்து மூலம் இவ்வூரை அடையலாம்.

நான் சென்று தரிசித்த தலங்களில் இத்தலம் ஒரு தனிச்சிறப்பு வாய்ந்த நிலையினையுடையது. சிவன் கோயிலை மையமாகக் கொண்டு நாற்புறங்களிலும் வீதிகள் அமைக்கப் பெற்று, தேவதச்சனாகிய விசுவகருமனால் அமைக்கப்பெற்ற அமராவதி நகரைப் போலத் திட்டமிட்டு அழகுற அமைக்கப் பட்டிருக்கிறது. பழங்காலத்தில் இவ்வூரில் மாட மாளிகைகளும், ஊரைச் சுற்றிலும் கோட்டை மதிலும், அதனையடுத்து ஆழ்ந்த அகழிகளும் இருந்தமை ஊரின் தோற்றத்தால் புலனாகிறது. கோட்டை மதிலில் பயன்படுத்தியபொறியெறியும் குண்டுகளும், யவனர் காலப்பொறிகளோ என ஐயுறும் கருங்கல் ஆயுதங்களும் ஆராய்ச்சியாளர்களால் கண்டு பிடிக்கப்பட்டு திருக்கோயிலில் பொதுமக்கள் பார்வைக்கு வைக்கப்பட்டுள்ளன.

கிழக்கு நோக்கிய சந்நிதியினையுடைய இத்திருக்கோயில் மிகவும் பழமையான தோற்றத்துடன் விளங்குகிறது. கருங்கற்களால் அமைக்கப்பட்ட கோயிலைச் சுற்றிலும் சுற்றுச் சுவர்கள் அமைந்துள்ளன. கோயிலை அமைத்தவன் காம்போசதேசமன்னன் ஆவான். இக்கோயிலைக் கற்றளியாக ஆக்கியவன் யார்? காலம் யாது? என்பது ஆராய்ச்சியாளர்களால் அறியமுடியவில்லை. ராஜகோபுரத்தின் முன்னே திருக்குளமும் அதற்குக்கிழக்கே ராணி மாடமும் அமைந்துள்ளன. ராஜகோபுரத்தையடுத்துக் கோயிலின் உள்ளே இடப்பக்கமாக வடக்கு நோக்கிய நிலையில் அம்மன் சன்னதி அமைந்துள்ளது. தலமரம் சரக்கொன்றை. இது கோயிலின் உள் திருச்சுற்றின் வடக்குப் பக்கத்தில் மேடை மீது அலங்காரமாய்க் காட்சியளிக்கிறது.

தலத்தின் பெயர்கள்: தென்கயிலே, கோவூர், கொன்றைவனம், பானு புரம், இந்திரபுரி, வாலி நகர், அன்னமிடு மெய்ப்பேரூர், கந்து காபுரி, ஆவூர், பந்தணை நல்லூர்.

இறைவன்பெயர்: ஸ்ரீபசுபதீஸ்வரர்.

இறைவி பெயர்: வேணுபுஜாம் பிகை; காம்பேய் தோளி.

தீர்த்தச் சிறப்பு: சூரிய தீர்த்தம். இதுகோ யிலின் எதிரே உள்ளது. காம்போசதேச மன்னன் காந்தன் நோயினால் பிடிக்கப்பட்டு, இத் தலத்தை யடைந்து தீர்த்தத்தில் நீராடி, ஒரு மண்டலம் தங்கி இறைவனை வணங்கி, நோய் நீங் கப்பெற்றதாகத் தலப்பெருமை பேசப்பட்டு வருகிறது. இக்குளத் தின் படித்துறை அவன் பெயரால் ''காம்போச மன்னன் துறை'' என்று வழங்கப்பட்டு வருகிறது.

தலபுராணம்: உலகத் தாயாகிய உமாதேவி பந்தாட விரும்பி, தன் விருப்பத்தை இறைவனிடம் விண்ணப்பித்தாள். இறைவ னும் இசைந்து நான்குவேதங்களை யும் பந்துகளாக்கித் தந்தனன். உமாதேவி மிக்க மகிழ்ச்சி யடைந்து தன் தோழிகளுடன் பந்தாட்டம் ஆடினள். உமா தேவியின் விளையாட்டுக்கு இடர் விளைக்கவிருப்பாத ஞாயிறு மறை யாது நீண்ட பொழுது நிலைக்க லாயிற்று. இதனால் உலக இயக்கம் தடைப்பட்டது. இத் தடையை நேரில் உணர்த்தச் சென்ற நாரதரையும், சிவபெரு மானையும் விளையாட்டு உற்சாகத் தில் அன்னையார் கவனிக்கவில்லை: இதனால் முகம் சிவந்த சிவபெரு மான் காலனை எறிந்த காலால் பந்துகளை எற்றி, பூவுலகிற்குச் செல்லச் செய்தார். பந்துகளைக் காணாத அன்னையார் ஞானக்கண் விழிக்க, நடந்தவற்றை உணர்ந்து இறைவனை வணங்கினார். எனி னும் சபிக்கப்பட்டார். அதன்படி அன்னையார் பசுவுருக்கொண்டு வர, தமையனாகிய கேசவன் (திருமால்) மாட்டிடையனாக உருக்கொண்டு பின் தொடர மண்ணுலகில் பந்து வீழ்ந்து அணைந்த ஊரிலுள்ள கொன்றை மரக்காட்டை அடைந்தனர். அங்குமேய்ந்து சரக்கொன்றைமர நிழலில் சுயம்புலிங்கமாய் இருந்த புற்றின் மேல் பாலைச் சொரிந்து வந்தனர். மாட்டிடையனாகிய கேச வனும் அறியாமல் நடந்த ஒரு செயல் இதுவாகும். கேசவன், காட்டில் உள்ள கண்ணுவ முனி வர் ஆச்ரமத்தில் தங்கிவந்தான். ஒரு நாள் கண்ணுவமுனிவர் பூசை செய்யவேண்டி, கேசவனிடம்பால் தருமாறு கேட்க, கேசவனும் பசு வின் மீது கவனம் செலுத்தலா னான். ஒரு நாள் கொன்றைக்காட் டில் சுயம்புலிங்கத்தின் மீது பால் சொரியும் தன் பசுவைக்கண்ட கேசவன் கோலால் அதனைஅடிக்க அதுவும் துள்ளிப்புற்றைமிதித்தது

அப்போது இறைவனருளால் அன்னே பசுவுரு நீங்கித் தன்னுருப் பெற்ருள். இடையனுகிய கேசவ னும் உருமாறி ஆதிகேசவனுஞன். அன்னே புற்றினடியில் அமர்ந்து கிழக்கு நோக்கி இருந்து தவம் செய்ய, அதனைக் கண்டு மகிழ்ந்த இறைவன் காட்சி தந்து அன்னேயை மணந்து கொண்டு அந்தத் தலத்திலேயே ''பசுபதி நாதர்'' என்ற திருப்பெயருடன் கோயில்கொண்டு எழுந்தருளினர். புற்றின் முடியில் பந்தணேந்து வீழ்ந்த சுவட்டினேயும், பசுவின் குளம்படிச்சுவட்டினேயும் இன்றும் காணலாம். திருக்கோயிலேயடுத்து தென் பகுதியில் ஆதிகேசவன் கிழக்கு நோக்கிக் கோயில் கொண் டெழுந்தருளியுள்ளார்.

பாடல் சிறப்பு: இவ்வூர் திரு ஞானசம்பந்தர், திருநாவுக்கரசர் ஆகியோரால் பாடப்பெற்ற பெருமையினேயுடையது. ஞான சம்பந்தர் பாடிய அருட்பாக்கள் பதினென்றும், திருநாவுக்கரசர் பாடிய திருத்தாண்டகம் பத்தும் உள்ளன. இதுவன்றி அருணகிரி நாதர் பாடிய திருப்புகழ்ப் பாடல் கள் ஏழு கிடைத்துள்ளன. சிதம்பரம் இராமலிங்கஅடிகளார் இரண்டு அடிகளில் தலத்தின் பெருமையினேயும், இறைவனின் புகழையும் பாடியுள்ளார்.

வழிபட்டுப் பயன் பெற்ருேர்

ஆதிகேசவப் பெருமாள், கண் ணுவமுனிவர், வாலி, இந்திரன், பிரமன், சூரியன், காமதேனு ஆகியோர் இத்தலத்தைவழிபட்டு இஷ்ட சித்தி பெற்றனர்.

காம்பிலி நாட்டரசனுகிய பூபதி என்பானின் மகன் பிறவிக் குருட ஞவான். அதனைப் போக்க, அவ் வரசன் இத்தலத்திற்கு வந்து மண்ணியாற்றில் நீராடி, இறை வனே வழிபட்டதனுல் மகனுக்குப் பார்வைஉண்டாகப்பெற்று இறை வரைப் போற்றினுன். தன் மக னுக்குப் ''பசுபதி'' என்றபெயரை யும் சூட்டி மகிழ்ந்தான். பெரும் பொருட்செலவில் ஆலயத்தைக் கட்டி முடித்தான்.

மிருத்துஞ்சயன் என்ற அந்த ணன் ஒருவன் பசுவைக் கொன்ற பாவத்தினுல் குட்டநோய் தாக்கி வருந்தினுன். இத்தலத்திற்கு வந்து குளத்தில் நீராடி, இறை வனே வழிபட்டபின் நோய் முற்றி லும் நீங்கப்பெற்ருன்.

வித்யாவதி என்ற விலேமகளும் துளுவநாட்டு மன்னன் ஒருவனும் இத்தலத்திற்கு வந்து இறைவனே வணங்கி நற்கதி பெற்றதாகத் தலபுராணம் சாற்றுகிறது.

கல்வெட்டால் அறிவன:

1. இரண்டாம் இராசராசன் (12-ம் நூற்ருண்டு) காலத்திய கல் வெட்டு ஒன்றினுல் தனியார் வச மிருந்த இக்கோயிலின் நிர்வாகம்

குடிமக்களிடம் மாற்றப் பட்ட தாகத் தெரியவருகிறது.

(2) சக்ரவர்த்தி இராசராச தேவர் காலத்தில் அவரால் இறைவனுக்குச் சாத்த வேண்டித் திருவாபரணம் செய்யும் பொருட்டு கோயில் கருவூலத்தில் முடக்கி வைக்கப்பட்டிருந்த பொன்னின் ஒரு பகுதியை, கோயிலில் பணி செய்த சிவப்பிராமணர்கள் திருடிக் கொண்டதாகவும், அதனைக்கண்டு பிடித்து அவர்களுக்குத் தண்டனையாக 180 காசுகள் அபராதம் விதித்ததுடன் அமையாது, அவர்களும் அவர்கள் வம்சத்தினரும் கோயிலுக்குள் நுழையக் கூடாது என்று ஆணைபிறப்பித்ததாகவும் கல்வெட்டு ஒன்றால் அறியலாம். அபராதத் தொகையைத் திருப்பணிக்காகப் பயன்படுத்தியதாகவும் தெரிகிறது. இக்கல்வெட்டு கோயிலின் மகா மண்டபத்தின் வடபுறத்தில் உள்ளது.

முதலாம் இராசராசன் காலத்திய கல்வெட்டு ஒன்றிலிருந்து இக் கோயிலில் ஹாசியன் விக்கிரமாதித்தன் என்ற பெயருடைய ஒருவன் நட்டுவப்பங்கு, மெய் மட்டிப் பங்கு ஆகியவற்றைப் பெற்று விளங்கினன் என்ற செய்தி புலனாகிறது. இராசராச நாடகத்தில் அவன் பெரும் பங்கு கொண்டு விளங்கியமையால் ''ராஜ ராஜ நாடகப் பெரியன்'' என்ற பட்டப்பெயர் பெற்றான் என்பதும் புலனாகிறது.

கோயிலைப் புதுப்பித்து திருப்பணி செய்யும்போது, பழைய கல்வெட்டுக்களைப் பெயர்த்து எடுத்து திருப்பணி முடிந்தபின் மீண்டும் பழுதுபடாமல் அதே இடத்தில் வைத்துப்பாதுகாக்கும் பழக்கம் அக்காலத்தில் இருந்தமை ஒரு கல்வெட்டில் புலனாகிறது

அலுவலர் மொழிந்த அருஞ்செய்திகள்:

''இக்கோயில் மிகப் பழமையானது. அரசர்களால் வழங்கப்பட்ட நிலபுலங்களில் காலப் போக்கில் மறைந்ததுபோக இப்போது நன்செய் 100 வேலியும் புன்செய் 30 வேலியும் கோயிலுக்கு உரிமையாக உள்ளன. கட்டிடங்களும், மனைக்கட்டுக்களும் உள்ளன. ஆண்டு வருமானம் 1 லட்சத்துக்கு மேல் வருகிறது. தினந்தோறும் ஆறுகால பூசைகள் நடைபெற்று வருகின்றன, மாத உற்சவங்களும் நடைபெறுகின்றன. சமீபகாலத்தில் பெரும் பொருட் செலவில் திருப்பணிச் செய்யப்பெற்றுக் குடமுழுக்கு விழாவும் நடைபெற்றது. மாசி மாதத்தில் மகோற்சவம் நடைபெற்று வருகின்றது. போதுமான பர வாகனங்கள் கோயிலில் உள்ளன. அவையன்றி வெள்ளிப் பல்லக்கு ஒன்றும், மயில் வாகனம் ஒன்றும், காளைவாகனம் இரண்டும் உள்ளன. திருவாபரணங்கள் போதுமான அளவில் உண்டு. கோயில் நந்தவனம் நன்கு பராமரிக்கப்பட்டு வருகிறது. நூல்நிலையம் சிறந்துவிளங்குகிறது.

(வளரும்)

# அனுமார் கலித்துறைப் பதிகம்

1. பொன்னேர மைந்த புகழ்ச்சீதைக் காகப் பொருதிலங்கை
மன்னேரக் கொன்ற பெரும்பழி தீர்ந்திட மாமுனிவ
ரின்னேரம் நீசிவ பூசைசெய் யென்னவிரா மன்சொன்ன
வன்னேரஞ் சென்றுலிங் கங்கொடு வந்த வனுமந்தனே.

2. கொடியாடுந் தேவையின் மால்செய்யும் பூசனைகொண்ட
சடைமுடியா ரிராமலிங் கேசர்தன் சன்னிதி முன்பிடப்பாற்
படியார்ந்த தெட்சண மூர்த்தங் கொண்டேயருள் பாலித்திட
வடியார் துயர்க்கு மருந்தாய் முளைத்த வனுமந்தனே.

3. சீரான வாரி கடந்தாய் பிழைக்கச்சஞ் சீவிதந்தாய்
போரா னரக்கனைக் கொல்வித் தனேகம் புகழ்படைத்தாய்
வாரத லிங்கமி ராகவன் முன்கொடு வந்துவைத்தா
யாராலும் சொல்ல வெளிதோநின் சீர்த்தி அனுமந்தனே.

4. மடங்காப் பிரமபழிக் கிலிங்கங் கொடுவந் திடுமுன்
குடங்காண்ப யோதரச் சீதை மணலைக் குவிக்கவதை
விடங்காணுங் கண்ட னெனமா லருச்சிக்க வீறுற்றுப்பின்
னடங்காத கோப மடங்கித் தொழுத வனுமந்தனே.

5. முன்பு வைத்தாய் கணையாழியைச் சீதைக்கு முன்கொடுபோய்
பின்பு வைத்தாய் கொடுவந்து சஞ்சீவி பிழைப்பவர்க்காய்
துன்பு வைத்தாடும் வருந்தா தருள்செயத் தோன்றியநீ
அன்பு வைத்தென் கலிதீரா ததென்ன வனுமந்தனே.

6. பவனித் தவளவிடை யானி ராமன் பழிதவிர்த்த
சிவனித் தலத்தெய்து நாட்டொட் டரசு செலுத்திவைகுந்
தவனித்த பூரண ராமனுக் காளிவன் ருள்பணிவீ
ரவனித் தலத்திங்கு கண்கண்ட தெய்வ மனுமந்தனே.

7. வாட்கொண்ட சேனை யிரவாணன் றேர்க்கெதிர் வாய்ந்துபொரத்
தோட்கொண்டி ராமன் றிருவடி தாங்கித் துதிபடைத்தாய்
கோட்கொண்ட வஞ்சர் குடிலத்தைத் தீர்த்துக் குறையகற்றி
யாட்கொண் டெனையும் புரப்பாய் கருணை யனுமந்தனே.

8 கரியிர்க்கக் கராவிழுக்கக் கூப்பிடில் வந்த காட்சிகண்டோ
பரிகிட்டிசை யிந்திரன் வாழ்வும் வேதன் படைப்புமெங்கும்
விரிகீர்த்தி யும்பர் பதமுத் தியும்வீ டுந்தரு
மரிகீர்த்தனஞ் செய்யடி யாரைக் காப்ப தனுமந்தனே:

9. வெல்லுந்திறல் கொண்டி ராமன ரக்கரை விரட்டிக்
கொல்லும்படி முன்னம் தூதாய்ப்பின் றேண்மிசை கொண்ட மரிற்
செல்லுந்திசை தொறும்நீ யாய்விளங் கிச்செயஞ் செய்வித்தா
யல்லும் பகலும் தொழுவோர்க் கருள்செய் யனுமந்தனே,

10. படைக்கலந் தாங்கு மிராகவன் பூசனை பண்ணுமன்ன
நடைக்கலன மிக்கபரு வதவர்த்தனி நாதன் செய்ய
சடைக்கலங் காரனி ராமீசன் சன்னிதி சார்ந்தனனி
னைடைக்கல மென்னைப் புரந்தருள் வெற்றி யனுமந்தனே,

11 வஞ்சனை பில்லி தவிர்ப்பது மந்திர வாதிகளைக்
கெஞ்சனை விப்பது பஞ்சனத் தூடு கிளர்கின்றது
மிஞ்சனு யாய்ச்சண் முகதாசன் பாடல் விரும்பியரு
ளஞ்சனை பாலக நீயே தென்றேவை யனுமந்தனே.

# உங்களுக்கு ஒரு வாய்ப்பு

# தீட்சை வகைகள்

ந. ம. வெள்ளைவாரணம்

முன்னுரை: தீக்ஷை (தீட்சை) என்ற சொல்லில் தீ என்பது கொடுத்தலையும் க்ஷை என்பது குறைத்தலையும் குறிக்கும். அதாவது தீக்ஷை என்பது ஞானத்தைக் கொடுத்துப் பாசவலிமையைக் குறைத்தல் என்று பொருள்படும் பற்பல பிறவி எடுத்துச் சிவபுண்ணியத்தின் மேலீட்டால் பரிபாகம் எய்திய உயிர்களுக்கு இறைவன் தானே நேராகக் குருவாகக எழுந்தருளித் தீட்சையளிப்பான். பரிபாகம் எய்தத்தக்க உயிர்களுக்கு இறைவன் மனிதர்களில் ஒருவரை அதிட்டித்துக் குருவாக நிறுத்தித் தீட்சை அளிப்பான்.

வகைகள்: தீட்சையானது சமயம், விசேடம், நிருவாணம் என மூன்று படிமுறைகளை உடையது. இவைகளுக்கு அங்கமாக நயனம், பரிசம், வாசகம், மானசம், சாத்திரம், யோகம் என ஆறு வகைகள் உள்ளன. இவற்றின் விளக்கங்களைக் கீழே காண்போம்.

சமய தீட்சை: ஒருவன் தன்னைச் சைவ சமயத்தவன் என்று சொல்லிக் கொள்வதற்கு அதிகாரம் தருவது சமய தீட்சையாகும். இந்தத் தீட்சையின் வழியாக ஆசாரியனிடம் திருவைந்தெழுத்தை உபதேசமாகப் பெறவேண்டும். அங்ஙனம் சமயதீட்சை பெற்றவன் நாடோறும் சந்தியாவந்தனமும் பஞ்சாக்கர செபமும் செய்ய வேண்டும், இவன் திருக்கோயில்களில் சரியைத் தொண்டு செய்ய அருகதை உடையவன் ஆவான்.

விசேடதீட்சை; சமயதீட்சையைப் பெற்று அதன்வழி ஒழுகி அதில் ஒரு அனுபவமுற்றவர்க்குச் சிவபூசைச் செய்ய அதிகாரம் தருவது விசேட தீட்சையாகும். இந்தத் தீட்சையின் வழியாக ஆசாரியனிடம் சிவபூசை எழுந்தருளுவித்துக் கொண்டவர் நாடோறும் சிவபூசை செய்தல் வேண்டும். இவர்கள் சிவாகமங்களை ஓதுவதற்கும் யோக சாதனை செய்வதற்கும் அருகதை உடையவர் ஆவார்.

நிர்வாணதீட்சை: சமய விசேட தீட்சைகளைப் பெற்று அவற்றின் வழி ஒழுகி அனுபவ முதிர்ச்சி உற்றவர்க்கு ஞானமார்க்கத்தில் செல்ல அதிகாரம் தருவது நிர்வாண தீட்சையாகும். இந்தத் தீட்சை பெற்றவர் அகப்பற்று, புறப்பற்றுக்களை விட்டவராய்ச் சிவபூசை செய்துவரல் வேண்டும். இவர்கள் ஞான சாத்திரங்களை ஓதவும், ஓதுவிக்கவும் அருகதை உடையவராவர்.

நயனதீட்சை: மீன் ஆனது தனது கண் பார்வையினாலே தன் முட்டைகளிலிருந்து குஞ்சுகளை வெளிப்படுத்துவதைப் போல, ஆசாரியன் தனது கண்பார்வையினாலே சீடனுக்கு ஞானத்தைக் கொடுத்துப்

பாசத்தை தருவது நயன தீட்சையாகும். இதனைச் சட்சு தீட்சை என்றும் கூறுவர். (நயனம், சட்சு என்ற சொற்கள் கண் என்று பொருள் படும்.)

பரிசதீட்சை: கோழியானது தனது உடம்பின் பரிசத்தாலே தன் முட்டைகளிலிருந்து குஞ்சுகளை வெளிப் படுத்துவதைப் போல, ஆசாரியன் தனது கையைச் சிடனின் தலைமீது வைத்துப் பரிச உணர்வாலே சிடனுக்கு ஞானத்தைக் கொடுத்துப் பாசத்தை நீக்குவது பரிச தீட்சையாகும். இதனைக் ஹஸ்த மஸ்த சையோகம் என்றும் கூறுவர். (பரிசம்-தொடு உணர்ச்சி)

வாசகதீட்சை: ஆசாரியன் திருவைந்தெழுத்து முதலிய மந்திரங்களை உபதேசம் செய்வதனாலே (சொல்லித்தருவதனால்) சிடனுக்கு ஞானத்தைக் கொடுத்துப் பாசத்தை நீக்குவது வாசகதீட்சையாகும். இதனை மந்திர தீட்சை என்றும் கூறுவர்.

மானச தீட்சை: ஆமையானது தனது மன நினைப்பினாலே தனது முட்டைகளிலிருந்து குஞ்சுகளை வெளிப்படுத்துவதைப் போல, ஆசாரியன் தனது மனநினைப்பினாலே சிடனுக்கு ஞானத்தைக் கொடுத்துப் பாசத்தை நீக்குவது மானசதீட்சையாகும்.

சாத்திரதீட்சை: ஆசாரியன் வேதாகமங்களின் உட்கிடையான பதிபசு பாச இயல்புகளையும் இறைவனை அடைவதற்குரிய சரியை முதலிய வழிகளையும் சாத்திரங்களின் வழியாக உபதேசம் செய்வதனாலே சிடனுக்கு ஞானத்தைக் கொடுத்துப் பாசத்தை நீக்குவது சாத்திர தீட்சையாகும்.

யோக தீட்சை: ஆசாரியன் தனது யோக சாதனையால் சிடனின் உடலுக்குள் புகுந்து சிடனை யோக நெறியில் நிறுத்தும் முறையினாலே சிடனுக்கு ஞானத்தைக் கொடுத்துப் பாசத்தை நீக்குவது யோக தீட்சையாகும்.

செய்விக்கும் முறை: தீட்சை அளிக்கும்போது வேள்வித் தீயை எழுப்பி ஹோமம் கொடுத்துத் தீட்சை அளிப்பது ஆகமமுறையாகும், இங்ஙனம் ஓமத்தோடு செய்யப்படும் தீட்சை ஔத்திரி தீட்சை எனப் படும் இது ஞானவதி கிரியாவதி என இருவகைப்படும். ஞானவதி என்பது குண்டம் மண்டலம் அமைத்தலையும் ஓமம் கொடுத்தலையும் மனோபாவனையாகவே செய்து தீட்சை அளிப்பதாகும். கிரியாவதி என்பது குண்டம் மண்டலம் முதலியவற்றைப் புறத்தே அமைத்து வேள்வித் தீயை எழுப்புதலையும் ஓமம் கொடுத்தலையும் கிரியைகளாகவே செய்து தீட்சை அளிப்பதாகும்

முடிவுரை: தீட்சை என்பது ஒருவரைத் தூய்மைப் படுத்தி இன்னின்ன காரியம் செய்யலாம் என உரிமை வழங்கும் சடங்காகும். இங்ஙனம் தீட்சையால் உரிமை பெற்றுச் செய்யும் செயல்கள் முழுப்பயனையும் கொடுக்கும். தீட்சைபெறாமல் செய்யும் செயல்கள் குறைந்த பயனையே தரும். எனவேதான் தீட்சையின் அவசியத்தைச் சமய சாத்திரங்கள் வற்புறுத்துகின்றன.

# சைவ சித்தாந்தத்தின் சிறப்பு

எஸ். இராமலிங்கம், B.sc., (Ag) B.L.

சைவ சித்தாந்தச் செந்நெறியின் சிறப்பையும் அருமை பெருமைகளையும் நம் முன்னோர் தம் நூல்களில் பலவகைளில் கூறி யுள்ளார். மேல் நாட்டு அறிஞர்களும் அதன் சிறப்பை உணர்ந்து வியந்துள்ளார்கள். திருமூலர் திருமந்திரம் பாட்டு 2394 ல்

''சித்தாந்தத்தே சிவன் முத்தி சித்தித்தலாற்
சித்தாந்தத்தே நிற்போர் முத்தி சித்தித்தவர்
சித்தாந்த வேதாந்தஞ் செம்பொரு ளாதலால்
சித்தாந்த வேதாந்தங் காட்டுஞ் சிவனையே''

என்று சித்தாந்தத்தே சிவன் முத்தி சித்திக்கும் என்றும் பாட்டு 2403ல்

''மன்னிய சோகமா மாமறை யாளர்தற்
சென்னிய தான சிவயோகமாம் ஈதென்ன
அன்னது சித்தாந்த மாமறையாய் பொருள்
துன்னிய ஆகம நூலெனத் தோன்றுமே.

என்று சித்தாந்தம் ஆகம நூல் என்றும் பாட்டு 2393 ல்

சிவமாதல் வேதாந்த சித்தாந்த மாகும்
அவ மவமாகு மவ்வவ் விரண்டுஞ்
சிவமாஞ் சதாசிவன் செய்தொன் றுஞனல்
நவமான வேதாந்த ஞான சித்தாந்தமே''

என்றும் சைவ சித்தாந்தத்தின் சிறப்பை உணர்த்தியுள்ளார் மேலும் சிவப்பிரகாசம் முதலிய நூல்களிலும் அதன் பெருமையை உணர்த்து கிறார்கள். அவைகளைப்பற்றி பின் வரும் அத்யாயங்களில் விரிவாக காண்போம். சைவ சித்தாந்தத்தின் கொள்கை அல்லது நெறி தென் இந்தியத் தமிழர்களின் பேரறிவின் பெரு விளைவாகும். இதனுடைய அடிப்படை மேற்கொள் பெருநூல்கள் அனைத்தும்ச் தமிழகத்து சான்றோர் பெருமக்களால் ஒழுங்காக வகுத்து வரையறை செய்து வைக் கப்பட்டுள்ளது. சைவத் திருமுறைகள் 12 ம் மெய் கண்ட சாத்திரங் கள் 14 ம் அவற்றிற்கு மாறுபடாமல் அவற்றை தழுவிச்செல்லும் ஏனைய பிறநூல்களுமே சைவ சித்தாந்தத்தின் அடிப்படை முதன்மை நூல்களாகத் திகழ்கின்றன.

சைவ சித்தாந்தத்தின் சிறப்பை மேல் நாட்டுப் பேரறிஞர்களும் பாராட்டி வியந்திருக்கிறார்கள். நம் நாட்டு மகான்களும் பாராட்டியுள்ளார்கள். இப்பேர்ப்பட்ட சைவ சித்தாந்தம் மற்ற ஏனைய கொள்கைகளைப் போல் இன்னும் மக்களிடையே பரவாமல் இருப்பதுவியக்கத்தக்கது. இதை நம் சைவப் பெருமக்கள் ஆராய்ந்து ஒரு வழி வகுத்தல் வேண்டும்.

சில மேல் நாட்டு அறிஞர்களும் நம் நாட்டு அறிஞர்களும் சைவ சித்தாந்தத்தின் சிறப்பை எவ்விதம் பாராட்டுகிறார்கள் என்று பார்ப்போம். டாக்டர் ஜி. யு. போப் என்னும் மேல் நாட்டு அறிஞர்,

"The Saiva Sidhantha is the Choicest product of the dravidian intellect. It is the most eloberate, influencial and undoubtedly the most intrincically valuable of all the religions of india. It is peculiarly south indian and tamil religion" என்றும் மறைமலை அடிகளார் அவர்கள்,

"The fact must be borne in mind that in Tamil alone exist systematic, authoritative works on Saiva Sidhantha" என்றும் டியோஸ் பார்னார்டு என்னும் மேல்நாட்டு அறிஞர், "The unique position of saiva sidhantha in the history of thought is the fact that it expounds by careful reflection the systematic account of the process of cosmic evolution which attempts to comprehend the universe as a sum total of 36 categories. This exposition is no mere metaphysical speculations but is a purely logical on scientific principles" என்றும் மறைமலை அடிகள் மேலும்

"The recent developments of western philosophy and physical science go every inch to prove the truth and value of all the fundamental doctrines that are peculiar only to saiva sidhantha and not to any other religion or philosophy ancient or modern" என்றும்

சைவ சித்தாந்தத்தின் சிறப்பைக் கூறியுள்ளார்கள். சைவ சித்தாந்தம் எல்லாச்சமயங்களையும் ஏற்றுக்கொள்கிறது. எதனையும் இகழ்ந்து ஒதுக்குவதில்லை. உலகமுழுவதும் ஏற்புடைய மனித குல சமயமாகத் திகழ்கிறது. பிறச் சமயங்களையும் ஏற்று, அவைகளில் ஏற்றுக்கொள்ளக் கூடியவைகளை ஏற்றுக் குறையுள்ளவைகளைக்காரணகாரியங்களுடன் நீக்கி உண்மையை நிலை நாட்டுகிறது. இதை சர் மோனியர் வில்லியம்ஸ் எனும் அறிஞர்,

"A characteristic of saiva sidhantha is its receptivity and all comprehensiveness. It claims to be the one religion of humanity, of human nature, of the entire world. It cares not to oppose the progress of any other system. For it has no difficulty inl including all other religions within its all embracing arms and ever widening fold, and, in real truth, saiva sidhantha has some thing to offer which is suited to all minds. Its very strength lies in its infinite adaptability to the infinite diversities of human tendencies. It has highly spiritual and abstract side and concrete side suited to the man of poetic feeling and imagination, its quiescent and contemplative side suited to the man of peace and over of seclusion"

என்று தெளிவாகக் கூறியுள்ளார்.

பல பெரியவர்கள், பல நாட்டவர்கள் போற்றிடும் சைவ சித்தாந்த நெறியை நாம் தெரிந்து கொள்ளல் வேண்டும். அதன் கொள்கைகளைக் கடைப் பிடித்துக் சாதனைகள் செய்து வந்தால் கடைத்தேற வழியுண்டு. சிவனைக் காணலாம். சாயுஜ்ய பதவி அடையலாம்.

## இதமான வாழ்வுக்கு எளிய வழிகள்

(அ) தலைவலி

(NUTMEG) ஜாதிக்காயை அரைத்து நெற்றியில் பற்று போட தலைவலி நிற்கும்.

(ஆ) குளியல் நீர்

சுக்கை தட்டிப் போட்டு வென்னீர் தயார் செய்து குளிக்க நீர் ஏற்றம் தலைவலி நீங்கும்.

இ) அருந்தும் நீர் தூய்மை பெற

சுக்கு, சீரகம், கொத்தமல்லி, மூன்றையும் சம அளவு இடித்து வேண்டும் நீரில் போட்டு ஒரு கொதி வந்ததும் இறக்கி வைத்து நாள் முழுவதும் தண்ணீர் தேவைபடும் போதெல்லாம் அருந்த உடல் நலம் பெறும். எந்த நீரையும் தூய்மை செய்யும் (Protected) முறை இது மலையாள குடும்பங்களில் அனுபவ முறை.

Dr. N. சடையப்பன், S. M. P.

# திருக்கணித பஞ்சாங்கம்

தி. கி. நாராயணசாமி, கடலூர்.

துன்மதி ஞு வைகாசி மீ (1981 மே—ஜூன்)

திதி, நட்சத்திரம் முடியும் நேரம் (ரயில்வே மணிக்கணக்கில்)

| தமிழ்வ. | ஆங்கிலம்வ. | கிழமை | திதி | நட்சத்திரம் |
|---|---|---|---|---|
| 1 | (14—5—81) | வியாழன் | ஏகாதசி 20-16 | உத்திரம் 16-03 |
| 2 | (15—5—81) | வெள்ளி | துவாதசி 22-27 | அஸ்தம் 18-46 |
| 3 | (16—5—81) | சனி | திரயோதசி 24-47 | சித்திரை 21-39 |
| 4 | (17—5—81) | ஞாயிறு | சதுர்த்தசி 27-11 | சுவாதி 24-36 |
| 5 | (18—5—81) | திங்கள் | O பௌர்ணமி நாள் முழுவதும் | விசாகம் 27-32 |
| 6 | (19—5—81) | செவ்வாய் | பௌர்ணமி 5-34 | அனுஷம் நாள் முழுவதும் |
| 7 | (20—5—81) | புதன் | பிரதமை 7-50 | அனுஷம 6-23 |
| 8 | (21—5—81) | வியாழன் | துதியை 9-57 | கேட்டை 9-05 |
| 9 | (22—5—81) | வெள்ளி | திரிதியை 11-50 | மூலம் 11-33 |
| 10 | (23—5—81) | சனி | சதுர்த்தி 13-21 | பூராடம் 13-41 |
| 11 | (24—5—81) | ஞாயிறு | பஞ்சமி 14-26 | உத்திராடம் 15-23 |
| 12 | (25—5—81) | திங்கள் | சஷ்டி 14-57 | திருஓணம் 16-32 |
| 13 | (26—5—81) | செவ்வாய் | சப்தமி 14-50 | அவிட்டம் 17-04 |
| 14 | (27—5—81) | புதன் | அஷ்டமி 14-00 | சதையம் 16-53 |
| 15 | (28—5—81) | வியாழன் | நவமி 12-27 | பூரட்டாதி 16-00 |
| 16 | (29—5—81) | வெள்ளி | தசமி 10-14 | உத்திரட்டாதி 14-27 |
| 17 | (30—5—81) | சனி | ஏகாதசி 7-25<br>துவாதசி 28-08 | ரேவதி 12-19 |
| 18 | (31—5—81) | ஞாயிறு | திரயோதசி 24-31 | அசுவனி 9-46 |
| 19 | ( 1—6—81) | திங்கள் | சதுர்த்தசி 20-46 | பரணி 6-55<br>கிருத்திகை 27-59 |
| 20 | ( 2—6—81) | செவ்வாய் | ● அமாவாசை 17-02 | ரோகணி 25-08 |
| 21 | ( 3—6—81) | புதன் | பிரதமை 13-30 | மிருகசிரிஷம் 22-34 |
| 22 | ( 4—6—81) | வியாழன் | துதியை 10-21 | திருஆதிரை 20-27 |
| 23 | ( 5—6—81) | வெள்ளி | திரிதியை 7-44 | புனர்பூசம் 18-56 |
| 24 | ( 6—6—81) | சனி | சதுர்த்தி 5-57<br>பஞ்சமி 28-03 | பூசம் 18-08 |
| 25 | ( 7—6—81) | ஞாயிறு | சஷ்டி 28-12 | ஆயில்யம் 18-07 |
| 26 | ( 8—6—81) | திங்கள் | சப்தமி 28-35 | மகம் 18-53 |
| 27 | ( 9—6—81) | செவ்வாய் | அஷ்டமி நாள் முழுவதும் | பூரம் 20 23 |
| 28 | (10—6—81) | புதன் | அஷ்டமி 5-41 | உத்திரம் 22-30 |
| 29 | (11—6—81) | வியாழன் | நவமி 7-22 | அஸ்தம் 25-05 |
| 30 | (12—6—81) | வெள்ளி | தசமி 9 28 | சித்திரை 27-56 |
| 31 | (13—6—81) | சனி | ஏகாதசி 11-47 | சுவாதி நாள் முழுவதும் |
| 32 | (14—6—81) | ஞாயிறு | துவாதசி 14-11 | சுவாதி 6·54 |

# திருவிளையாடற் புராணம்

உரை நடை

## மாயப் பசு மதுரை மாநகரத்தின்மீது பாய வருதல்

அந்த மாயப் பசு தன் கொம்புகளினால் மேகங்களைக்குத்தி மேலே கோத்துக்கொண்டு ஆதிசேடன் முடியும், மேரு மலையும் புழுதியாட அடிபெயர்த்து வைத்தது; காற்றும் அஞ்சுமாறு விடுகின்ற மூச்சின் எதிரே சராசரப் பொருள்களுமாகிய எல்லாம் பூளைப்பூப்போல் சிதறி ஓடின; அதன் கோபத்தீயினுக்கு உலகமனைத்தையும் அழிக்கும் தீக் கடவுளின் அனல் குளிர்புனலை ஒப்பதாம்; பறவைகளும் விலங்குகளும் அலறி ஓலமிட்டு ஓடின; செறிந்த காடுகளையும் குன்றுகளையும் வெகுண்டு கொம்பினால் அடியோடு பெயர்த்துக் காற்றினைப் போல எறிந்து, அளவிறந்த மக்களைப் பின் தொடர்ந்து அவர்கள் உடலைச் சிதைத்து உயிரைத் தொலைத்து இடிபோலப் பேரொலி செய்து, கூற்றுவன் வரும் தன்மைபோல மதுரையை நோக்கி வெற்றிகொண்டு பாய வந்துகொண்டிருந்தது. அதனைப் பாண்டியன் அறிந்தான்.

## பாண்டியனும் நகர மக்களும் இறைவனை வேண்டல்

முக்கண் மூர்த்தியும், மதுரை மன்னவனும். சலந்தரனை ஆழி கொண்டு அழித்தவனுமாகிய சோமசுந்தரக்கடவுளின் திருக்கோயிலைப் பாண்டியனும், மதுரை நகரத்திலுள்ள பெரியோர்களும் அடைந்து, "நாதனே! இது முறையோ! வெள்ளியம்பலத்திலே கால் மாறி ஆடியருளும் திருவடிகளை யுடையவனே! இது முறையோ! எல்லா உயிர்களுக்கும் அறிவினை ஊட்டும் அறிவே! இது முறையோ! தூயவனே! எங்கும் நிறைந்தவனே! பழம்பொருளானவனே! வேதத்தை அருளியவனே! இது முறையோ!'' என்று கூவி முறையிட்டார்கள். அப்போது சோமசுந்தரக் கடவுள், தம் திருமுன்வந்து முறையிட்டவர்கள்பால் திருவருள் நோக்கினைச் செலுத்திக் கருணை புரிந்து, இடப நந்தியை அழைத்து, ''நீ சென்று சமணர்கள் விடுத்த கொடிய பசுவை வென்று வருவாயாக'' என்று கூறி விடுத்தருளினர்.

## இடப நந்தி தோற்றப் பொலிவுடன் வரும் காட்சி

உடனே இறைவரின் ஆணையினைப் பெற்ற அவ்விடபநந்தி கூற்றுவனும் அஞ்சும் வண்ணம் சினந்து எழுந்தது; அதன் கண்கள், வேள்விக் குண்டத் தழல்போல் கொதித்தன; நாக்கு நாசியினைத் துழாவியது கடைவாய் நுரை வழிந்து ஒழுகியது; தலை வானுலகத்தைத் தொட்டு நின்றது. நெற்றியிலே பட்டம் சிறந்து விளங்கியது, வளைந்த கொயலே செம்மணிப் பூண், பிறைச் சந்திரனைக் கேது என்னும் பாம்பு;

சுற்றிக்கிடந்தாற் போலத் திகழ்ந்தது; முதுகிலே பொற்கவசம் கதிரவனைப் போல் விளங்கியது; கொம்பிலே கட்டப்பெற்ற சவரிக் குஞ்சம் பிறைமதிக் கதிர்போல் தொங்கியது; நெற்றிக்கு முன்னே முத்தாலாகிய முகவட்டுப் பொலிந்து விளங்கியது; பின்னலாகிய மாட்டுச் சதங்கை மாலை கல்லென்று வாய்விட்டு ஆர்த்தது; பாம்பு நாவினை அசைத்தல் போலக் கழுத்தில் வீரமணி நா அசைந்து ஒலித்தது. நான்கு கால்களிலும் தண்டையும், சிறு சதங்கையும், அரசிலைவடிவாகச்செய்த மாலையும் சிலம்பும் ஒன்றுசேர்ந்து ஒலித்தன. காடியானது தன் அளையினால் நிலத்தைக் கிளறி அண்டத்தையும், எட்டுத் திசைகளையும் மூடுமாறு புழுதி எழுப்பியது. பெருமூச்செறிந்து கொம்பினால் குத்தி மண்ணைக் கோத்துக்கொண்டு மேகத்தை எதிர்க்க எழுந்ததுபோல வானத்தை நோக்கிய வண்ணம் கண்களினின்றும் தீயினைச் சிந்த விரைந்து நடந்தது.

இடபநந்தி மாயப்பசுவைக் கொல்லுதல்

வெள்ளிய இடபமானது தனது பிறைச்சந்திரனை ஒத்த கொம்பினால் சூல்கொண்ட மேகத்தின் வயிற்றைக் கிழித்துத் துள்ளிக் கொண்டு வெள்ளிமலையொன்று கால்பெற்று நடந்தாற்போல விரைந்து சென்று பகைத்துச் சிற்றங்கொண்டு நிலத்தை மோந்து பெருமூச்செறிந்து பசுவினை அணுகியது; அப்பொழுதே மேற்கே உள்ள பசுவைக் கிழக்கே உள்ளது என்றும், கிழக்கே உள்ளதை மேற்கே உள்ளது என்றும், வடக்கே உள்ளதைத் தெற்கே உள்ளது என்றும், வடக்கே உள்ளதைத் தெற்கே உள்ளது என்றும் தெற்கே உள்ளதை வடக்கே உள்ளது என்றும், சொல்லும்படி இடையறாது துரத்தியது; கொம்பிற் கோத்து முதுகு கீழாமாறு தள்ளியது; மீண்டும் எடுத்தது; மலையைக் காற்றுப் பெயர்த்து வீசியதுபோலத் திசைப்புறத்திலே எறிந்தது; மலைச்சிகரங்கள் தூளாகும்படி தூக்கி எற்றியது; மரச் செறிவுகளின் கிளைகள் முறியுமாறு எடுத்து வீசியது. விண்ணுலகத்தினின்றும் கடலில் விழும் காமதேனுவைப் போலக் கடலின்கண் எடுத்து வீசியது. இவ்வாறு இடபம் போர் விளையாடலைப் புரிந்து. சமணர்கள் முன் எண்ணியபடியே பொருது அதன் உயிர்க்குத் துன்பஞ் செய்யாது தனது பேரழகைக் காட்டிற்று. உடனே மாயப்பசு அவ் விடபத்தின்மீது இச்சைகொண்டு மலரம்பால் ஏறுண்டு காமம் மிகுந்து உயிரோடு விரியத்தையும் விட்டுக் கீழே விழ்ந்தது. உடனே அதன் உடல் [1] மலை வடிவமாயிற்று.

---

1. இது மதுரையை அடுத்துள்ள பசுமலையாகத் திகழ்கின்றது.
': ..கோவுயிர்விட்ட பின்னர்ச், சிரியபிறங்கலாக்கித் திருவிளையாடல்

அதுகண்ட மதுரை நகர் மக்கள் யாவரும் நீங்காத மகிழ்ச்சி யடைந்தனர். அனந்தகுணபாண்டியனின் திண்ணிய தோள்கள் பூரித்தன. சூரியன் உதித்த காலை இருள்கெட்டு ஓடுதல் போலச் சமணர்கள் யாவரும் நாணத்துடன் புறங்கொடுத்து ஓடினர்.

### இடபமலை

உலகத்தார் அறியுஞ் சான்றாக இடபநந்தி தனது தூல சரீரத்தை [1]இடபமலையாக அங்கே விளங்க நிறுத்திவிட்டுச் சூக்கும சரீரத்தோடு மதுரை நாயகனை அடைந்து வணங்க, அவர் திருவருள்புரிந்து, ''முன்னைய வடிவமாகி இங்கே இரு'' என்று இருத்தி யருளினர். அப்பொழுது நகர மக்களும் அனந்தகுண பாண்டியனும் பெருமகிழ்ச்சி கொண்டு சந்நிதியில் இருந்த இடபதேவரின் திருவடியை அடைந்து வணங்கிக் கொண்டு சென்றனர். சோமசுந்தரக்கடவுள் அந்த நந்தி தேவரின் வெற்றிமிக்க பெருமிதத்தினைக்கண்டுமீனாட்சியம்மையோடும் களிப்புற்று இருந்தருளினர்.

### இராமபிரான் இடபமலையில் வந்து தங்குதல்

[2]இராமபிரான் இலங்கைக்குப் போகும்போது வானரப் படைகள் சூழ இலக்குவன், அனுமான், சுக்கிரீவன் முதலாய வீரர்களோடும் அந்த இடபக் குன்றின்மேல் வந்து தங்கினான். அதனையறிந்த அகத்திய முனிவர் அங்குவந்து இராமபிரானுக்கு ஆக்கமொழிகூறி மதுரைப் பதியின் மான்மியத்தை அருளிச் செய்தார்.

### இராமபிரான் சொக்கலிங்க மூர்த்தியை வழிபட்டு வேண்டுதல்

சொக்கலிங்கப் பெருமானின் பெருமைகளைக் கேட்ட இராமபிரான் சிரமேற் கூப்பிய கைகளுடன் அகத்திய முனிவரொடு பொற்றாமரைத் தீர்த்தத்தை அடைந்து நீராடி, சொக்கலிங்கப் பெருமானின் திருவடிகளை அன்போடு வணங்கி, வேத சிவாகம முறைப்படி பூசித்துத் துதித்து நின்று, ''தேவர் யாவர்க்கும் உயர்ந்தோனே! சிவன் முத்தி புரத்திற்குத் தலைவனே! தாயபோக நலங்கள் எவற்றுக்குங் காரண வடிவாகிய சங்கரனே! இந்நிலவுலகத்தின்கண் நின்னுடைய தெய்வத் தன்மை பொருந்திய பதிகள் பல உள்ளன; அவற்றுள் இம் மதுரையே

---

காணப், பார்மிசை வழங்கு வித்தான் பகமலை என்ன வாங்கு'' என்பது திருவாலவாயுடையார் திருவிளையாடற் புராணம்.

1. இவ் விடபமலை சோலைமலை எனவும், அழகர்மலை எனவும் பெயர் பெறும்.

2. இங்கு, இது முதலாய வரலாறு திருவாலவாயுடையார் திருவிளையாடற் புராணத்தில் கூறப்படவில்லை.

மிக்க அற்புதமுடைய சிறந்த பதியாகும்; இதுமிக்க மேன்மையுடைத்து என்று கூறுவது யாதெனின், எல்லா வுலகமும் நின்னிடத்தே அன்பு வைத்து உய்யும் பொருட்டு நீர் செய்தருளிய திருவிளையாடல்களின் வரலாறு [1]மலை வடிவங்களாகி இத் திருநகர்ப்புறத்தே நின்று விளங்கு தலினாலாம்; தரிசித்த மாத்திரத்திலே சகல துன்பங்களைப் போக்கு தற்கும், சகல செல்வங்களை அருளுதற்கும் கருணைகொண்டு தேவரீர் வீற்றிருக்கும் சிறப்பினாலே இச் சொக்கலிங்கத்திற்கு வேறொன்று ஒப் பாகுமோ? தன்னில் நீராடும் போது பழவினைத் தொகுதியைச் சிதைத்து நினது மங்கல போகத்தை அருளும்படி அமைந்த இப் பொற்றாமரைத் தீர்த்தத்திற்கு மற்றொரு தீர்த்தம் ஒப்பாகுமோ? எத் தலங்களிலும் மூர்த்தி, தீர்த்தம், தலம் என்னும் மூன்றனுள் ஒவ் வொன்றே சிறப்புற்று விளங்கும். இங்கே இம்மூன்றும் சிறந்திருக் கின்றன. ஆதலால், இறைவனே! இப் பதியானது தன்னை அடைந் தவர் அனைவர்க்கும் சித்த சுத்தியும், அணிமா முதலிய பல்வகைச் சித்திகளையும் அருளா நிற்கும்.

கண்ட வெல்லையில் துன்பங்கள் களைதற்கும் அளவைச்(கு)
உண்ட ரும்பெருஞ் செல் வங்கள் அளித்தற்குங் கருணை
கொண்டு நீயுறை சிறப்பினுல் குளிர்மதிக் கண்ணி
அண்ட வாண!இவ் விலிங்கத்துக்(கு) ஒப்புவே றுமோ?

தோய்ந்தி டுப்பொழு(து) ஈட்டிய தொல்வினைப் படலம்
மாய்ந்தி டும்படி மாடுய்த்துநின் மங்கல போகம்
ஈந்தி டுப்படிக்(கு) இருந்தமா தீர்த்தத்தின் இயல்பை
ஆய்ந்தி டுப்பொழு(து) அதற்கொரு தீர்த்தமொப் பாமோ?

எத்த லத்திலும் ஒவ்வொன்று விழுமிதாம்; இந்த
மெய்த் தலத்தில்இம் மூவகை விழுப்பமும் விளங்கும்;
அத்த! ஆதலால் இத்தலம் அடைந்தவர் எவர்க்குஞ்
சித்த சுத்தியும் பல்வகைச் சித்தியும் பயக்கும்.

அடியேன் எண்ணிய கருமமும் உண்மையாக முடியுந்தன்மை அரிதோ! அச்செயல் எப்படி முடிதல் வேண்டுமோ அப்படி விரைந்து முடியும்பொருட்டு அருள்புரிதல் வேண்டும்'' என்று இரந்து வேண்டி னன்.

---

1. மலை வடிவங்கள் - இவை பசுமலை, இடபமலை என்னும் மலை வடிவங்கள் ஆகும்.

### இராமபிரானுக்கு இறைவன் அசரீரியாக மொழிதல்

அப்போது சோமசுந்தரக் கடவுள், "சூரியன் மரபில் வந்த இராமனே! நீ நாமிருக்கும் இந்நகருக்குத் தென் கீழ்த்திசையிற் சென்று கடலிலே சேதுபந்தனம் செய்து, இலங்கையினை அடைந்து, இராவணனுடைய பத்துத் தலைகளையும் துணித்துச் சீதையைச் சிறையினின்றும் நீக்கி, மீளவும் நினது அயோத்தியை அடைந்து உலகினை[1] நெடுங்காலம் ஆட்சி புரிந்து இனிதாக இருந்து பின்னுளில் வைகுண்டத்தை அடைவாயாக; இப்பொழுது நீ கவலை கொள்ளாதே" என்று அசரீரி வாக்காக அருளிச் செய்தார்.

### இராமபிரான் வெற்றியுடன் தன்னூடு அடைதல்

இராமபிரான் அதுகேட்டு மனமகிழ்ந்து இறைவனை வணங்கி விடைபெற்றுக்கொண்டு போய்ச் சேதுபந்தனஞ் செய்து இலங்கையை அடைந்தான்; அறத்தை அழித்த பாவியாகிய இராவணனைக் கொன்று அவனுடைய அரசச் செல்வங்களை அவன் தம்பியாகிய விபீடணனுக்கு அளித்துவிட்டுச் சீதையோடும் மீண்டுவந்து சேது என்னும் [2]இராமேச்சுவரத்தில் சிவலிங்கப் பிரதிட்டைசெய்து பூசித்து அவனருளைப்பெற்றுத் தன்னைப் பற்றித் தொடர்ந்த கொலைப் பழியினின்றும் நீங்கினுன்; அதன்பின்பு சோமசுந்தரக் கடவுளை மீளவும் வந்து வணங்கிக் கொண்டு சீதையுடன் [3]அயோத்தி நகரத்தை அடைந்தான்.

### அனந்தகுண பாண்டியன் இறைவன் திருவடி அடைதல்

பின்பு அனந்தகுண பாண்டியன் குலபூடணனைப் பெற்று அரசாட்சியை அவனிடத்தில் அளித்துவிட்டுச் சோமசுந்தரக் கடவுளின் திருவருளால் சிவபுரத்தை அடைந்தான்.

செங்கோல் அனந்த குணமீனவன் தேயங்காப்பக்
கொங்கோ(டு) அவிழ்தார்க் குலபூடணன் தன்னையீன்று
பொங்கோத ஞாலப் பொறைமற்றவன் பாலிறக்கி
எங்கோன் அருளால் சிவநகர் ஏறினனே.

செய்யுள் — 33
ஆகச் செய்யுள் — 1663

---

1. நெடுங்காலம்-இது பதினேராயிரம் ஆண்டு என்பர்.

2. இராமேச்சுவரத்தில் இராமபிரான், வேதங்களில் வல்லவனும் சிவ வழிபாட்டை மேற்கொண்டவனுமான இராவணனைக் கொன்ற கொலைப்பழி நீங்கும் பொருட்டுச் சிவவழிபாடு புரிந்ததனை, "தேவியை வவ்விய தென்னிலங்கைத் தசமாமுகன், பூவிய லும்முடி பொன்றுவித்தபழி போயற. ஏவியலுஞ்சிலை யண்ணல் செய்தவிரா மேச்சுரம், மேவிய சிந்தையி ஞர்கடம மேல்வினை வீடுமே" எனவரும் திருஞானசம்பந்தர் தேவாரத்தாலும் அறியலாம்.

3. அயோத்தி - இது யுத்தத்தில் பகைவரால் வெல்லப்படாதது என்னும் பொருளது.

## 30. மெய்க் காட்டிட்ட படலம்

### குலபூடணன் சேனைகளைப் பெருக்கக் கட்டளையிடுதல்

குலபூடண பாண்டியன் செங்கோலேந்தி உலகினைச் செவ்வனே பாதுகாத்து வந்தான். அவனுக்குச் [1] சவுந்தர சாமந்தன் என்னும் பெயர்கொண்ட சேனைத்தலைவன் ஒருவன் இருந்தான். அவன் சிவ னடியார்களையே சிவமாக மனத்திற் கொண்டு வழிபட்டொழுகும் கடப்பாட்டு நெறியில் நின்றவன்; அரசனுக்கு இம்மைக்கும் மறுமைக் கும் துணையாக நின்று ஒழுகுபவன். அக்காலத்தில் வேடர்களுக்குத் தலைவனாகிய [2] சேதிராயன் என்னும் வேடன் ஒருவன் விளங்கினான். அவன் பல வெற்றியின் வலியினால் மேம்பட்டு இறுமாப்புடன் பாண்டி யன்மீது பகைமை பூண்டு படையெடுத்துச் செல்லக் கருதினான். அதனைக் குலபூடண பாண்டியன் அறிந்து, தன் படைத் தலைவனாகிய சவுந்தர சாமந்தனை நோக்கி, "நீ நமது நிதி அறையினைத் திறந்து வேண்டும் பொருளை எடுத்துக்கொடுத்துப் புதிதாக இன்னும் சில சேனைகளைச் சேர்த்துப் பதிவுசெய்து கொள்வாயாக" என்றான்.

### சேனாதிபதி அரனுக்கும் அடியார்க்கும் பொருளை வழங்கல்

அதனைக்கேட்டு, இறைவன் திருவடிக்கு அன்புபூண்டவனாகிய சுந்தர சாமந்தன், பாண்டியன் இட்டபணி பின்னே நின்று தள்ளச் சிவபெருமானின் திருவருள் முன்னே வந்து இழுக்க விரைந்துசென்று பொன்னறையினைத் திறந்தான்; அறநெறியால் தேடிக் குவித்து வைத்த திரவியக் குவியலுள் தனது அவா அடங்கத்தக்க திரவியங் களைக் கைக்கொண்டு எல்லையற்ற மகிழ்ச்சியோடு திருக்கோயிலை அடைந்து, பொற்றாமரைத் தீர்த்தத்தில் நீராடினான்; தன் உள்ளத் திலே நிறைந்த மெய்யன்பினாலே ஒளிவடிவாயும் வேதப்பொருளாயும்

---

1. இவன், 'சுந்தர சாமந்தன்' எனவும் பெயர் பெறுபவன், சாமந்தன் - படைத் தலைவன். இவன், 'கொந்தகக் குலத்தில் பிறந்த வன், என்று திருவாலவாயுடையார் திருவிளையாடற் புராணங்கூறும். மதுரைக்குத் தென்கிழக்கில் சுமார் ஐந்துமைல் தூரத்தில் கொந்தகை என்னும் ஓர் ஊர் உண்டு; அதில் கொந்தக வேளாளர் என்ற மரபினர் இன்றும் உளர்.

2. சேதிராயன் - சேதிநாட்டு அரசன்; இவன் குறுநில மன்னன் ஆவன். ஒரு காலத்தில் தமிழ்நாட்டு மூவேந்தரல்லாத குறுநில மன்னர்களை வேடர், காடவர் முதலிய பெயர்களால் இழித்துக்கூறி வந்தனர் என்பர், சேதி நாடு - திருமுனைப்பாடு நாடு.

விளங்கும் சோமசுந்தரக் கடவுளின் திருமுன் சென்று கும்பிட்டு வணங்கிநின்று, ''பண் அமைந்த நான்மறைகளை விரித்துரைத்தருளிய மேலோனே! அடியார்கள் எண்ணிய கருமங்களையெல்லாம் முடிக்கும் எம்பெருமானே! இத்திரவியங்களெல்லாம் உமக்கும் உம்முடைய மெய்யடியார்களுக்குமே ஆகக் கடவன'' என்று வேண்டிக்கொண்டு அத்திரவியங்கள் முழுவதையும் சிவ புண்ணியவழியிலே செலவழிப்பானுயினன்; சிவபெருமானுக்குத் திருக்கோபுரமும், ஆயிரக்கால் மண்டபமும் எடுத்தான்; கண்டிகை, வயிரமணியாற் செய்த தோளணி, குண்டலங்கள், முத்துக்குடைகள், கொடிகள் முதலியவற்றைச் செய்தமைத்தான்; தேவர்களுக்கு ஊட்டும் அவியுணவின் வகைகளும், பூணூல் கலியாணம் முதலிய பலவகையான சிறு வேள்விகளும், அந்தணர்களுக்கு அறுசுவை நிறைந்த பேருண்டிகளும், துறவிகட்கு ஊட்டும் திருவமுதும், பல்வேறு தருமங்களும் பெருகச் செய்தான்; யாவராயினும் விபூதியும் உருத்திராட்சமும் தரித்தவர்களைக் கண்டால், ''இவரே நம் பிறப்பைப் போக்கத் திருவுருவமெடுத்து வந்த சிவபெருமான்'' என்று நிறைந்த அன்பால் உள்ளம் நெக்குருக் அவரை விரைந்து எதிர்கொண்டு வணங்கி அழைத்துவந்து வழிபட்டு அறுசுவையோடு கூடிய திருவமுதைச் செய்வித்து, அவர் உண்டு எஞ்சியவற்றையே உண்பான்[1].

எவரேனும் உருத்திரசா தனங்கண்டால் எதிர்வணங்கி
அவரேநம் பிறப்பறுக்க வடிவெடுத்த அரன்என்று
கவராத அன்புள்ளங் கசிந்தொழுக அருச்சித்துச்
சுவையாறின் அமுதருத்தி எஞ்சியஇன் சுவைதெரிவான்.

இவ்வாறு சுந்தரசாமந்தன் கொன்றைச் சடையாருக்கும், அடியார்களுக்கும் இன்றைக்கு ஆயிரம் பொன்னும், நாளைக்கு இரண்டாயிரம் பொன்னும், அடுத்துவரும் நாட்களுக்கும் அன்றைக்கு அன்று இருமடங்குமாக அரசனுடைய பொருள்களெல்லாவற்றையும் அள்ளி வழங்கினன். இதனைக் குலபூடண பாண்டியன் ஒற்றர்மூலம் கேள்வியுற்றான்.

---

1. இங்கு, ''எவரேனுந் தாமாக விலாடத்திட்ட திருநீறுஞ் சாதனமுங் கண்டா லுள்கி, உவராதே அவரவரைக் கண்டபோதே உகந்தடிமைத் திறநினைத்தங் குவந்து நோக்கி, இவர்தேவர் அவர் தேவர் என்று சொல்லி இரண்டாட்டா தொழிந்தீசன் திறமே பேணிக், கவராதே தொழுமடியார் நெஞ்சினுள்ளே கன்றாப்பூர் நடுதறியைக் காண லாமே'' என வரும் அப்பர் திருத்தாண்டகம் சிந்திக்கற்பாலது.

### பொய் ஓலை எழுதுதல்

சேனாதிபதியாகிய சவுந்தரசாமந்தன், தன்மேல் அரசன் ஐயுறு வண்ணம் அரசவையினை அடைந்து, அரசகாரியம் பார்ப்பவர்களோடு கலந்து, பிறநாட்டிலுள்ள வீரர்களுக்குப் பொருளை அனுப்பிப் பாண்டியன் சேனையில் வந்து பதிவு செய்துகொள்ள ஓலைவிடுத்து அவர்களை அழைப்பவன்போலப் பாவனை காட்டி, 'தெலுங்கர்களுக்கு ஓலை எழுதுக! கலிங்கர்களுக்கு ஓலை எழுதுக! விராடர்களுக்கு ஓலை எழுதுக! மராட்டியர்களுக்கு ஓலை எழுதுக! கொங்கர்களுக்கு ஓலை எழுதுக! வங்கர்களுக்கு ஓலை எழுதுக! துருக்கர்களுக்கு ஓலை எழுதுக!' என்று கூறிப் பொய்யோலை எழுதுவித்து அனுப்பினான். எங்கும் இப்படியே பொய்யோலை அனுப்பிவிட்டிருக்க, ஆறுமாதங்கள்வரையும் அந்த வீரர்கள் வரவினைக் காணாமல் பாண்டியன், சவுந்தரசாமந்தனை அழைத்து, "நாளைச் சூரியன் மறையுமுன்னே ஓலை விடுத்த படைவீரர்கள் அனைவரையும் அழைக்கக் கடவாய்" என்றான்.

### சேனாதிபதிக்கு இறைவன் அசரீரியாக மொழிதல்

அதற்கேற்பச் சுந்தரசாமந்தன் உடன்பட்டுத் திருக்கோயிலை அடைந்து சோமசுந்தரக் கடவுள் திருவடியின் கீழே வீழ்ந்து வணங்கி, "எம்பெருமானே! அரசனளித்த மலைபோன்ற பொருள்களெல்லாவற்றையும் ஏற்றுக்கொண்டு அடியேனைப் பணிகொண்டருளினையே! இனிச் சேனைகளைத் திரட்டும் வகை யாது?" என்று விண்ணப்பஞ் செய்து நின்றான். அப்பொழுது அடியாரின் குறையினைத் தீர்த்து ஆண்டருளுவதையே விரதமாகக் கொண்டருவிய கூடலம் பதிக்கு நாயகனாகிய சோமசுந்தரக் கடவுளின் திருவருளாலே "நாளைக்குச் சேனை வீரர்களோடு நாமும் வந்து தோன்றுவோம்; நீயும் வீரர் வரவைவிரும்பிய பாண்டியனது அவையின்கட்சென்று இருப்பாயாக' என்று விண்ணினின்றும் ஓரசரீரிவாக்கு எழுந்தது. அத்திருவாக்கினைக் கேட்ட சவுந்தரசாமந்தன், மகிழ்ச்சி வெள்ளத்தில் ஆழ்ந்தான். சூரியனும் மேலைக் கடல் வெள்ளத்தில் மூழ்கினான்.

### இராப்பொழுதைச் சேனாதிபதி கழித்தல்

மேருவினை வில்லாகக் கொண்ட சோமந்தரக் கடவுள், தம் சிவகணங்களை வேலேந்திய வீரர்களாகச் செய்து, தாமும், ஒரு குதிரை வீரனாகக்கோலம் பூண்டான், திருக்கூத்தாடுவதற்கு இடப்பட்ட நீலநிறத்தையுடைய எழினி (திரை) போலக் கரிய இருள் எங்கும் வந்துபரவச் சவுந்தரசாமந்தன் தன் இல்லத்தினைஅடைந்து, 'விடிவது எப்போது' என்று கருதித் தூங்காமல் அடிக்கடி எழுந்தெழுந்து விண்மீன்களை நோக்கி, நாழிகையைக் எண்ணி எண்ணி சோமசுதரக் கடவுளின் வருகையைக் காணுதற்கு இரவு முழுதையும் அளந்தனன்.

ஸ்ரீ குமரகுருபரர்



கயிலைச் சிறப்பிதழ்

## திருவிளையாடற் புராணம்

வரங்கள் தந்தருள் எனமுது வானவர் முனிவோர்
கரங்கள் தந்தலை முகிழ்த்திடக் கருணைசெய் தவிச்சை
உரங்கடந்து உரை உணர் வெலாங்கடந்து அருமறையின்
சிரங்க டந்தவன் இருப்பது திருக்கயி லாயம்.

## கந்த புராணம்

இன்ன தன்மையில் அமரரும் முனிவரும் எய்த
அன்னர் தம்மோடும் செங்கண்மால் கயிலையை அடைந்து
முன்னர் வைகிய நந்திகள் முறையினுய்த் திடப்போய்த்
தன்னையே தனக்கொப்பவன் பொற்கழல் தாழ்ந்தான்.

## முத்துக்குமாரசுவாமி பிள்ளைத்தமிழ்

மைவிழிச் செங்கமல வல்லிக்கு நேமியான்
மணிமார்பு வாணிக்குநான்
மறைமுதலி செந்நாத் தடந்தைய லாளொடும்
வயித்தியக் கடவுளார்க்கு

மெய்விரிக் குந்தொண்ட ருள்ளத் தடத்ினொடு
வேதச் சிரங்கடுப்ப
வேதபுரி கந்தபுரி புள்ளூ ரெனப்பொலியும்
வேளூர திசைதிசைதொறும்

கைவகுத் தரமகளிர் குரவையாட் டயர்பெருங்
கயிலைத் தடஞ்சாரலும்
கனகா சலத்தும்வளர் இமயா சலத்துமுயர்
கந்தமா தனவெற்பெனத்

தெய்வதப் பிடியொடும் விளையாடு மழகளிறு
செங்கீரை யாடியருளே
செத்துப் பிறக்கின்ற தெய்வங்கள் மணவாள
செங்கீரை யாடியருளே.

—ஸ்ரீ குமரகுருபர சுவாமிகள்



# திருக்கயிலாய யாத்திரை



திருப்பனந்தாள் ஸ்ரீ காசிமடத்து 21வது அதிபர்

கயிலைமாமுனிவர்

## ஸ்ரீலஸ்ரீ காசிவாசி முத்துக்குமாரசுவாமித் தம்பிரான் சுவாமிகள் அவர்கள்

பூவினுக் கருங்கலம் பொங்குதாமரை ஆதல் போல, உலகினுக் கருங்கலம் உயர் கயிலாயமாம். இது, காத்தும் படைத்தும் கரந்தும் விளையாடும் தனி முதல்வன் வீற்றிருந்தருளும் சிறப்புடையது. மூவுலகும் நான்மறையும் எண்ணில் மா தவம் வந்து எய்திய புண்ணியம் திரண்டுள்ளது போல்வது. ஊழிதோறூழி முற்றும் உயர்ந்தோங்கும் சிறப்பினது.

இத்தகைய உயர்ந்த திருக்கயிலாய மலையைக் கண்டு வழிபடப் பெற்ற புண்ணியமுடையவர்கள் நம்திருக்கயிலாயபரம்பரை தருமபுர ஆதீனத்து எழுந்தருளியிருந்து அருட்செங்கோல் ஓச்சியருளிய ஸ்ரீலஸ்ரீ கயிலைக்குருமணி அவர்கள் ஆவார்கள். அவர்கள் அப்பேறு பெற்ற முதலே நமக்கும் அப்புண்ணியப்பேறு அடைய வேண்டும் என்னும் எண்ணம் திருவருளால் முகிழ்த்தது.

திருவருளால் உதித்த அவ்வெண்ணம் திருவருளாலன்றி நிறை வேறுதன்றே! கந்தர் சஷ்டியில் திருச்செந்தூர்ப் பெருமானை வழி படும் புண்ணியம் கடந்த சில ஆண்டுகளாக நமக்குக் கிடைத்து வருகிறது. அவ்வகையில் சென்ற ஆண்டு கந்தர் சஷ்டியில் திருச் செந்திலாண்டவன் திருமுன்னிலையில் வழிபடுங்கால், தொண்டை மண்டல ஆதீனம் சீலத்திரு குருமகாசந்நிதானம் அவர்களும் உடனிருந்தார்கள். ஈரோட்டு அன்பர் திரு. அழகப்பன் அவர்களும் உடனிருந்தார். முன்னர் அரும்பிய திருக்கயிலாய யாத்திரை செந்திலாண்டவன் திருமுன்னிலையில் மலர்வதாயிற்று. அன்றே சீலத் திரு குருமகாசந்நிதானம் அவர்களும் ஈரோட்டு அன்பரும் நாமும்

திருக்கயிலாய யாத்திரை செல்ல ஆயத்தமானேம். பேரூர் ஆதீனம் தவத்திரு சாந்தலிங்க இராமசாமி அடிகளார் தாமும் யாத்திரையில் உடன் வர விருப்பம் கொண்டார்கள். அப்பொழுதிருந்தே வேண்டிய ஏற்பாடுகளைச் செய்யலானேம்.

இவ்வேற்பாடுகளைச் செய்யத் தொடங்கிய பொழுதே இறைவனின் அருள் பெற்றுச் செல்ல வேண்டும் என்ற எண்ணத்தால் தென்னாட்டுத் திருத்தலங்களில் குறிப்பாகவும் சிறப்பாகவும் அமைந்த திருத்தலயாத்திரை ஒன்றை மேற்கொண்டோம். இராமேசுவரம், உத்தரகோசமங்கை, திருச்செந்தூர், கன்னியாகுமரி, மதுரை, பழனி ஆகிய திருத்தலங்களுக்குச் சென்று வழிபாடாற்றி வந்தோம்.

''குருவருளால் வைத்தபடியிருக்க மாட்டாத மாந்தர்க்குச் சித்த சலனமாம் தினம்'' என்பது தருமை ஆதீனக் குருமுதல்வரின் திருவாக்காகும். வடநாட்டு யாத்திரையாயினும் தென்னாட்டு யாத்திரையாயினும் குருவருள் பெற்றுச் செல்வதே நம் மரபாகும். இம்முறை குருவருள் பெற்றுச்செல்வதற்கு உரிய காலம் தருமபுர ஆதீனம் குருமுதல்வரின் குருபூசை நாளாகவும் அமைந்தது. தருமை ஆதீனத்து இருபத்தாருவது பட்டத்தில் எழுந்தருளிபிருந்து அருட்செங்கோல் ஒச்சிவரும் ஸ்ரீலஸ்ரீ குருமகா சந்நிதானம் அவர்கள் நம்பால் மிகவும் பெருங்கருணை கொண்டவர்கள். ஸ்ரீலஸ்ரீ குருமகா சந்நிதானம் அவர்கள் சொக்கநாதப்பெருமானை வழிபட்டு மாறிலா மகிழ்ச்சியில் திளைத்து நின்று நமக்கு அருட்பிரசாதம வழங்கும் பொழுது ''இது திருக்கயிலை செல்வதற்குரிய அருட்பிரசாதம்'' என அருளிச் செய்தார்கள். நாம் திருக்கயிலை செல்ல விண்ணப்பித்துக்கொள்வதற்கு முன்னமேயேகருத்தறிந்து முடிக்கும் ஸ்ரீலஸ்ரீ குருமகா சந்நிதானம் அவர்களின் அருள் நிலை இதுவாக இருந்தது.

குருபூசை நாளன்று தருமபுர ஆதீனத்துக்குச் சொந்தமான இருபத்தேழு தேவஸ்தானங்களிலிருந்தும் பிரசாதம் வருதலும் குருமகா சந்நிதானம் அவர்கள் ஏற்றருளுதலும் மரபாகும். அவ்வமயத்து, குருமகா சந்நிதானம் அவர்கள் மட்டும்இருந்தருளி ஏற்பார்கள். இம்முறையோ நம்மையும் உடனிருக்கப் பணித்துஇருபத்தேழு தேவஸ்தானங்களின் பிரசாதங்களையும் தாம் பெற்று, நமக்கும் ஒருங்கு வழங்கியருளினார்கள். இவ்வாறு நிறைவாகக் கிடைத்த குருவருள் நமக்குத் திருக்கயிலையை வழிபட்டு வருவதற்கு மிக்க எழுச்சியையும் இன்ப மீதூர்வையும் தந்தருளியது.

வேண்டுவார் வேண்டுவதே ஈந்தருளும் பெருமானின் திருவருளால் திருக்கயிலாய யாத்திரை சென்று வருவதற்கு உரிய சூழலும் ஆயத்தங்களும் உருவாகிவந்தன. 13—6—82 புதன்கிழமை புறப்படுவதெனத் தீர்மானிக்கப்பட்டது.

நம் திருமடத்தில் நாம் நாளும் வழிபாடாற்றி வரும் சொக்கலிங்கப்பெருமானையும் செந்திற் பெருமானையும் வழிபட்டு அப்பெருமானின் திருவருளையும், அதுபொழுது தருமையாதீனம் ஸ்ரீலஸ்ரீ குருமகா சந்நிதானம் அவர்கள் வழங்கியருளிய சொக்கநாதப்பெருமானின் அருட்பிரசாதத்தைக் கவசமாக ஏற்று அக்குருவருளையும் துணைகொண்டு 23—6—82 புதன்கிழமை காலை ஸ்ரீகாசிமடத்திலிருந்து புறப்படலானோம்.

ஸ்ரீகாசி விநாயகரை வழிபட்ட பின்பு உந்து வண்டி சென்னை நோக்கி விரைந்தது மாலை 5 மணியளவில் சென்னை அடைந்தோம். புகைவண்டி நிலையத்திற்குத் தருமையாதீன பிரச்சார நிலைய சுவாமிகள், திரு. கி. இராமலிங்க முதலியார், திரு. மு. அருணாசலம் பிள்ளை முதலிய அன்பர்கள் பலர் வந்திருந்து வழியனுப்பினார்கள் உடனே தில்லிக்குப் புகைவண்டிப் பயணம் தொடங்கியது. 25-6-82 வெள்ளியன்று தில்லியை அடைந்து தில்லித் தமிழ்ச் சங்கத்தில் தங்கலாயிற்று.

26-6-82 முதல் 30-6-82 வரை தில்லியில் யாத்திரைக்கான முன்னேற்பாடுகள் நடந்தன. உத்திர சுவாமிமலையில் அபிஷேக ஆராதனைகள் செய்விக்கலாயிற்று.

1-7-82 வியாழனன்று அரசாங்க அதிகாரி திரு. S. S. சிங் என்பவர் யாத்திரை செல்வோருக்கு அது பற்றிய விளக்கம் கொடுத்தார். செல்லும் வழி, வழியில் கடைப்பிடிக்க வேண்டிய நெறி முறைகள், தங்குமிடம், உணவு வசதி, எடுத்துச் செல்லவேண்டிய பொருள்கள், அவற்றின் அவசியம் முதலானவை பற்றி விளக்கினார்.

2-7-82 வெள்ளியன்று யாத்திரை செல்வோருக்கு மருத்துவப் பரிசோதனைகள் நடத்தப் பெற்றன. 3-7-82 சனியன்று மருத்துவப் பரிசோதனையின் முடிவுகள் தெரிவிக்கப்பட்டு யாத்திரை செய்ய அனுமதியும் கிடைத்தது. தேவையான பொருள்கள் வாங்கிச் சேகரிக்கப் பெற்றன.

தில்லியிலிருந்து இந்திய எல்லையான லிப்புக் கணவாய் வரை சென்று வரும் செலவுக்காக உந்துக் கட்டணம், தங்குமிடம், உணவு, மருத்துவ வசதி முதலியவற்றுக்காக இந்திய அரசாங்கத்திடம் நபர்

ஒருவருக்கு ரூ 2500 செலுத்த வேண்டும். ஒருநபர் 420 டாலர் வரை கொண்டு செல்ல அனுமதிக்கப்படுகிறது. அமெரிக்க டாலர் சீனாவின் எல்லையில் சீன நாணயமாக மாற்றிக் கொள்ளப் பயன்படும். [1 டாலர்= 1. 88 யான். 1 யான்=சுமார் 5 ரூபாய். யான்என்பது சீன நாணயம்.]

3-7-82 சனிக்கிழமை காலை தொண்டை மண்டல ஆதீனம் சீலத்திரு குருமகா சந்நிதானம் அவர்களும், பேரூர் தவத்திரு சாந்தலிங்க இராமசாமி அடிகளார் அவர்களும், ஈரோடு திரு அழகப்பன் அவர்களும் விமானம் மூலம் தில்லிக்கு வந்தார்கள். அன்றே அவர்களுக்கு மருத்துவப் பரிசோதனையும் முடிவும் தெரிவிக்கப் பட்டு அனுமதியும் வழங்கப் பெற்றன.

4-7-82 ஞாயிறன்று காலை 7-30 மணிக்குத் தில்லியிலிருந்து அரசாங்க அனுமதிபெற்ற பயணப் பேருந்து புறப்பட்டது. இந்தப் பேருந்தில் 27 பேர் செல்லலாம். தொண்டைமண்டல ஆதீனம் சீலத்திரு குருமகா சந்நிதானம் அவர்களும், நாமும், பேரூர் தவத்திரு சாந்தலிங்க இராமசாமி அடிகளார் அவர்களும், நம் காரியம் பார்க்கும் R. பாலசுப்பிரமணியன், S. தேவதாஸ், R. சுரேஷ் என்ற மூவரும், கோவை அழகப்பன், திருமதி அழகப்பன், கிருஷ்ணன், ஈரோடு முனிசாமி, திருமதி முனிசாமி, தஞ்சாவூர் திருமதி பங்கஜம் தாஸ், பங்களூர் S. சத்தியநாராயண அய்யர், திரு ஷெட்டி, சென்னை குமார் என்போர்களும் மற்றும் வேறு மாநிலங்களைச் சார்ந்த சிலருமாக மொத்தம் 25 பேர் ''கயிலை மலையானே போற்றி போற்றி'' என்ற முழக்கத்துடன் பேருந்தில் புறப்பட்டோம். முந்திய சில தினங்களில் முதலிரண்டு யாத்திரை குழுக்கள் [Fist and Second Batch] சென்றன. நாம் சென்றது மூன்றாவது குழுவாகும்.

சஜிராலா என்ற இடத்தில் காலை உணவும், ருத்ரபூர் என்ற இடத்தில் நண்பகல் உணவும் வழங்கப் பெற்றன. தில்லியிலிருந்து 452 கி. மீ. பயணம் செய்த பிறகு இரவு 8 மணிக்குச் சம்பாவத் என்ற இடத்தை அடைந்தோம். இரவு அங்கே தங்கினோம் இரவில் கயிலைப் பதிகம் ஓதலும் அருளுரையாற்றலும் நடந்தன. இதேபோல் தங்கும் இடமெங்கும் இரவில் நடந்தன.

5-7-82 திங்களன்று சம்பாவத்தில் காலை உணவு வழங்கப் பெற்றது. நண்பகலுக்காக உணவுப் பொட்டலம் அளிக்கப் பெற்றது.

காலை 7-30 மணிக்குப் பேருந்து புறப்பட்டது. பித்ராகாட் என்ற இடத்தில் நண்பகல் 12 மணிக்கு உணவுப் பொட்டலங்கள் பிரிக்கப் பட்டன.

பித்ராகாட்டிலிருந்து சிறிது தொலைவு சென்றதும் குருநானக்சாகர் என்ற அணை உள்ளது. சம்பாவத்திலிருந்து 90 கி. மீ. சென்றதும் தினக்பூர் என்ற இடத்தை அடைந்தோம் இங்கிருந்து இமயமலையின் அடிவாரம் தொடங்குகிறது. மலைப் பாதையில் பேருந்து ஏறிச் சென்றது. மாலை 5-30 மணிக்குக் காளிகங்கா சங்கமக் கட்டத்தை அடைந்தோம். சங்கமத்தில் நாம் மட்டும் நீராடி வழிபாடு செய்தோம் மீண்டும் பேருந்து புறப்பட்டு இரவு டார்ச்சூலா என்ற இடத்தை அடைந்தது.

டார்ச்சூலா என்ற சொல் அடுப்பைப்போல மூன்று பக்கம் மலை அடைப்புக்களையும் ஒருபக்கம் வழியையும் உடையது என்று பொருள் படும். இந்த ஊர் இத்தகைய அமைப்புடையதால் டார்ச்சூலா என்று அழைக்கப்படுகிறது. இவ்வூர் நேபாளத்தின் எல்லை ஓரத்தில் இந்தியப் பகுதியில் இருக்கிறது.

இவ்விடத்தில் கூடாரத்தில் இரவு தங்கினோம். மலை வழியில் ஊன்றி நடக்க உதவுகின்ற ஊன்றுகோல் [கம்பு] இவ்வூரில்தான் கிடைத்தது. ஒருகம்பின் விலை ரூ 10. தில்லி முதலிய இடங்களில் இது கிடைக்கவில்லை.

6-7-82 செவ்வாய் அன்று காலைக்கும் நண்பகலுக்கும் சேர்த்து உணவுப் பொட்டலம் வழங்கப் பெற்றது. டார்ச்சூலாவிலிருந்து காலை 7-30க்குப் பேருந்து புறப்பட்டு 19 கி. மீ. சென்றதும் 8-30 மணிக்குத் தவாகாட் என்ற இடத்தை அடைந்தது. இவ்விடத்தோடு பேருந்து நின்று விடுகிறது. இவ்விடம் 3700 அடி உயரம். இதிலிருந்து நடை ஆரம்பமாகிறது. சாமான்களை ஏற்றக் குதிரைகள் அளிக்கப் பட்டன. நபர் ஒருவர்க்கு 25 கிலோ சாமான் வரை அனுமதிக்கப்படுகிறது. அதற்கு மேல் ஒவ்வொரு கிலோவுக்கும் ரூ 15 கட்டணம் வசூலிக்கப் படுகிறது. நடைப் பயணத்தின்போது உதவிக்கும் காவலுக்குமாக இராணுவத்தார் ஆறு பேர் வருகின்றார்கள். இவர்களில் ஒருவர் ஒயர்லஸ் ஆப்பரேட்டர்; மற்றொருவர் மருத்துவர். இந்த ஏற்பாடுகளை எல்லாம் ''தவாகாட்''டில் உள்ள குமான் மண்டல் விகாஸ் நிகம் என்ற நிறுவனம் செய்து கொடுக்கிறது.

தவாகாட்டில் காலை 10 மணிக்கு நடைப் பயணம் தொடங்கியது. சாமான்கள் குதிரை மேல் ஏற்றிச் செல்லப்பட்டன. வழியில் இரண்டு சிகரங்கள் ஏறி இறங்கினோம். 17 கி.மீ நடந்தபின் மாலை 5-30 மணிக்கு சிர்க்கா என்ற இடத்தை அடைந்தோம். உயரம் 8000 அடி. இங்கே ஓய்வு விடுதி உள்ளது. வசதிக்காகக் கூடாரமும் உள்ளன. இங்கே அன்று இரவு திருப்பதிகம் ஓதப் பெற்றது.

7—7—82 புதனன்று சிர்க்காவில் காலைக்கும் நண்பகலுக்கும் சிற்றுண்டிப் பொட்டலம் வழங்கப்பட்டது. காலை 7. 30க்கு நடைப் பயணம் தொடங்கினோம். மிக உயரமான மலை ஏற்றம் ஏற்றத்தின் முடிவான இடம் ரங்லிங்டாப் என்று அழைக்கப்படுகிறது. உயரம் 9840 அடி. அதன் பிறகு ஒரே இறக்கம். இவ்விடத்தில் பயணம் கடுமையாக இருக்கிறது. 17 கி மீ. நடந்தபின் ஜிப்தி என்ற இடத்தை மாலை 6. 30 மணிக்கு அடைந்தோம். இங்கே ஓய்வு விடுதியும் கூடாரமும் உள்ளன. சுற்றுப் புறத்தில் ஆப்பிள், பிளம்ஸ் முதலிய மரங்கள் இருக்கின்றன. யாத்ரீகரில் சிலர் பழங்களைப் பறிக்க முயன்றனர். அப்போது காவற்காரன் அப்பழங்கள் பிஞ்சு என்று கூறினான். அதைக்கேளாமல் சிலர் பறித்துத் தின்றனர். பிளம்ஸ் கடும்புளிப்பாக இருந்தது என்று பேசிக் கொண்டனர். ஓய்வுவிடுதி, இராணுவத்தார் உடையைப்போல் பசுமை கலந்த சிமெண்ட் நிறம் பூசப்பட்டிருந்தது. இந்த யாத்திரையின் வழியில் உள்ள எல்லா விடுதிகளும் இதே நிறத்தில் இருந்ததால், இந்த நிறமுள்ள கட்டடத்தைத் தொலைவில் கண்டவுடன் ''அதோ விடுதி'' என்று சொல்லி உற்சாகமாக விரைந்து நடக்க ஏதுவாக இருந்தது.

8-7-82 வியாழன் அன்று காலை, நண்பகல் உணவுப் பொட்டலங்களைப் பெற்றுக் கொண்டு ஜிப்தியிலிருந்து காலை 6 மணிக்குப் புறப்பட்டோம். வழி ஏற்றமும் இறக்கமுமாக இருந்தது. 8. கி.மீ நடந்து மாலை 3 மணிக்கு மால்பா என்ற இடத்தை அடைந்து அன்றிரவு தங்கினோம். இங்கே ஓய்வு விடுதியும் கூடாரமும் உள்ளன. நேற்று 17 கி.மீ நடந்த நாங்கள், இன்று 8 கி.மீ. தான் நடக்க முடிந்தது. இது வழியின் கடுமையை உணர்த்தும்.

9-7-82 வெள்ளியன்று காலை உணவு முடித்துக் கொண்டு புறப்பட்டோம். வழி மிகவும் ஏற்றமாக இருந்தது. 8. கி.மீ சென்றதும் பகல் 2மணிக்குப் புத்தி என்ற இடத்தை அடைந்தோம். உயரம் 9100 அடி. இரவு இங்கே தங்கினோம்.

10-7-82 சனிக்கிழமையன்று காலை 6மணிக்குப் புத்தியிலிருந்து புறப்பட்டு 14 கி.மீ நடந்து மாலை 3மணிக்கு குஞ்ஜி என்ற இடத்தை அடைந்தோம் உயரம் 10,330அடி. வழியில் ஏற்றமும் இறக்கமும் மிகுதியாக உள்ளன. அவ்வழி அடிக்கடி மண்சரிவுகள் ஏற்படக்கூடிய அபாயகரமானதாகவும் உள்ளது. புத்திக்கும் குஞ்சிக்கும் இடையே கர்ப்பியாங் என்ற கிராமம் உள்ளது. இங்கே அஞ்சல் நிலையம் இருக்கிறது. இதற்கு அப்பால் உள்ள இடங்களில் அஞ்சல் நிலையம் கிடையாது.

குஞ்சியில் சர்ப்பக்கோயில் உள்ளது. அங்கே, உயிருள்ள சர்ப்பங்கள் வழிபடப்படுகின்றன. இவ்வூரில் கோதுமை, சோளம் பூண்டு, உருளைக்கிழங்கு முதலியன பயிரிடப்படுகின்றன.

11-7-82 ஞாயிறன்று காலை புறப்பட்டு 9.கி.மீ. நடந்து காலாபாணி என்ற இடத்தை அடைந்தோம். உயரம் 11,800அடி. இவ்விடம் இந்திய இராணுவதளத்தின் கடைசி எல்லை. இங்கே காளிகோயில் ஒன்று உள்ளது. காளிகங்கை இங்கே உற்பத்தியாகிறது என்று சொல்லப்படுகிறது. இதற்கு ஏற்ப இக்கோயிலில் காளியின் காலடிக்குக் கீழே நீரோடை ஒன்று ஓடுகிறது. நாம் மட்டும் இங்கே நீராடினேம். காலாபாணி என்ற சொல் கருப்புத் தண்ணீர் என்று பொருள்படும். இங்கு ஓடும் காளி கங்காவின் நீர் தூரத்துப் பார்வைக்குக் கருப்பு நிறமாகத் தோன்றுகிறது: கையில் நீரை அள்ளினல் நிறம் எதுவும் இல்லாமல் சாதாரணமாகக் காணப் படுகிறது.

காலாபாணி என்ற இடத்தில் கூடாரத்தில் இரவு தங்கினேம். கூடாரத்துக்கு அண்மையில் 500அடி உயரத்தில் ஒரு மலைக்குகை தெரிகிறது. அக்குகையில் வியாசர் தவம் செய்தார் என்றும், அதற்கு வியாசர்குகை எனப் பெயர் வழங்குகிறது என்றும் அங்குள்ளவர்கள் சொல்லுகிறார்கள்: மற்றும் கூடாரத்துக்கு ஒரு மைல் தொலைவில் வெந்நீர் ஊற்று ஒன்று இருக்கிறது. சிலர் அங்கே சென்று நீராடி வந்தனர்.

12-7-82 திங்களன்று காலை காலாபாணியிலிருந்து புறப் பட்டோம். நடக்கும்போது பெருமூச்சு வாங்குகிறது. இரைக்கிறது, தங்கித்தங்கி நடக்க வேண்டி இருக்கிறது: சிறிது இடர்ப்பாட்டுடன் 8 கி.மீ நடந்து நாபி டாங் என்ற இடத்தை அடைந்தோம். உயரம்

13,000அடி: இரவு அங்கே தங்கினேம். திருப்பதிகம் ஓதல், அருளுரை யாடல் ஆகியவை நடந்தன.

13-7-82 செவ்வாயன்று நாபிடாங்கிலிருந்து காலே 6மணிக்குப் புறப்பட்டு 10.30மணிக்கு லிபுலேக் என்ற இடத்தை அடைந்தோம். உயரம் 16890அடி. காலாபாணியிலிருந்து இவ்விடம் வரை இந்திய திபேத்திய எல்லேப் போலீஸார் [I.T.B. Police] துணே வந்தனர். லிபுலேக் என்ற இடம் இந்திய சீன எல்லேக் கோட்டில் உள்ளது. இதற்கு அப்பால் சீன எல்லே.

லிபுலேக்கைத் தாண்டினல் 4கி.மீ தொலேவுக்குக் கடுமையான இறக்கம். பனி, பாறையாக வழிநெடுக உறைந்துபோய் வழி வழுக்கு கிறது. நடப்பது மிகவும் கடினம். முன்னே சாய்ந்தால் குப்புற வீழ்ந்து பனியில் சருக்க நேரும். பின்னே சாய்ந்தால் மல்லாந்து வீழ்ந்து பனியில் சருக்கிட நேரும். இந்த வழியில் நம்முடன் வந்தவர்களில் பலர் விழுந்தும் உருண்டும் சிறிதளவு வருந்த நேர்ந்தது. கூலியாட்கள் இவ்விடத்தில் சுமை மூட்டைகளேத் தூக்கிக் கொண்டு நடப்பதில்லே. மூட்டைகளேப் பனியின் சருக்கலில் உருட்டி விடுகிருர்கள். அவைகளேக் கீழே இறங்கி வந்த பிறகு எடுத்துக் கொள்கிருர்கள். சாமான் மூட்டைகளே இப்படி உருட்டி விட்டதால் மூட்டைக்குள் இருந்த பெட்டிகள் சில உடைந்து போயின. கைப்பிடிகள் ஒடிந்து விட்டன பாட்டில்கள் சிதறுண்டன.

இவ்விதம் 4 கி.மீ பனிச்சருக்கலில் இறங்கிய பிறகு அனேவரும் குதிரை மீது ஏறிக் கொண்டோம். குதிரைப்பயணமாக 21 கி.மீ கடந்து தக்ளகோட் என்ற இடத்தை அடைந்தோம்.

தக்ளகோட் என்றஇடம் சீன எல்லேக்குள் இருக்கிறது. இங்கே சீன இராணுவமுகாம் உள்ளது. அவ்விடத்தில் யாத்திரை செய்வோர் களுக்குச் சுங்கப் பரிசிலனே செய்த பின்னரே தங்குமிடம் அளிக்கப்படு கிறது. இரவு7மணிக்கு (சீனநேரம் 9-30க்கு) நம்முடன் வந்தவர்கள் 25பேருக்கும் பரிசோதனே [செக்கிங்] நடைபெற்றது; இரவு அங்கே தங்கினேம்.

தக்ளகோட்டிலிருந்து கயிலேமலேயின் அடிவாரத்தில்உள்ள டார் சேன்கேம்ப்வரை டிரக்கில்சென்றுவரஒருநபர்க்குசீனஅரசாங்கத்துக்கு ரூ1000 கட்டணம் செலுத்த வேண்டும். காலே உணவுக்குரூ10ம், பகல் உணவுக்கு ரூ20ம் இரவு உணவுக்கு ரூ20ம், செலுத்த வேண்டும், ரொட்டியும், உருளேக்கிழங்கும், பச்சைக்காய்கறிகளும், கீரைரசமும்,

வேர்க்கடலை வறுவலும் உணவாகத் தருகிறார்கள். படுக்கை,டெண்ட் வசதியும் அளிக்கிறார்கள். நமக்கும் நம்மவர்களுக்கும் தனியாக நம் காரியம் பார்ப்போரைக் கொண்டு உணவு தயாரித்துக்கொண்டோம்.

14-7-82 புதனன்று தக்ளகோட்டில் சீன ராணுவ முகாமில் யாத்திரைக்கட்டணத்தை டாலராகச் செலுத்தினோம். சீன எல்லைக்குள் பயன்படுத்தற்காக அமெரிக்க டாலரைக்கொடுத்துச்சீன நாணயமான யாண் பெற்றுக்கொண்டோம். சீன ராணுவமுகாமில் ஆங்கிலம் தெரிந்தவர் ஒருவர்மட்டுமே இருக்கிறார். இதனால் மொழிப்பிரச்சனை ஏற்பட்டு ஒருவர் கருத்தை மற்றவர்அறிவதில் இன்னல்உண்டாகிறது. இங்கே குளியலறை கழிவறை வசதிகள் இல்லை. நம்நாட்டவர்க்கு இதனால் இடர்ப்பாடும் மன அருவருப்பும் ஏற்படுகிறது.

புதன்கிழமை இரவு சீனர்கள் யாத்திரீகர்களுக்குத் திரைப்படம் (பிலிம்) காட்டினார்கள். அவை சீனநாட்டின் இயற்கை அமைப்பு, ஆக்கவேலை முதலியன பற்றி அமைந்திருந்தன, படத்தின் ஒலி சீன மொழியாக இருந்தது. எனவே படத்தை மட்டும் கண்டு செய்திகளை ஊகித்தறிய வேண்டியிருந்தது.

15-7-82 வியாழனன்று நமக்கு மௌனவிரதம்; மேலும் அன்றைக்கு ஜன்மநட்சத்திரமான பரணி. காலை5மணிக்கு [சீனநேரம் 7-30க்கு] சீன டிரக் ஒன்று வந்தது. யாத்திரைக்குழுவில் உள்ள 25 பேர்கள் இரண்டுகுழுவாகப் பிரிக்கப்பெற்றனர். நாமும்நம்மவர்களும் ஒருபிரிவாகவும், வேறுமாநிலத்தவர் வேறொரு பிரிவாகவும் அமைய நேர்ந்தது. வேறுமாநிலத்தவர் நாணயம் ஒன்றைச் சுண்டிப் பூவா தலையா போட்டுப்பார்த்து நம்மையும் நம்மவர்களையும் முதலில்போக அனுமதித்தனர். இந்த முதல் வாய்ப்பானது கயிலாய நாதன் நமக்கு முதலில் காட்சிதரக் கொடுத்த பெருங்கருணையே என்று சொல்ல வேண்டும். நம்முடன்வந்த வேறுமாநிலத்தினரின் மதுவருந்தல்புகைத்தல் போன்ற செயல்களால் நமக்குச் சிறு அருவருப்பு இருந்து வந்தது. இங்ஙனம் இருபிரிவாகப் பிரியச்செய்து நமக்குத் தெய்வீக நெறியில் தனித்துத் தரிசனம் தரும் பொருட்டுக் கயிலாயநாதன் அருள் பாலித்தான்.

சீனடிரக்கில் மூட்டைமுடிச்சுகளுடன் 22 பேர்ஏறிக்கொண்டனர் அதற்குமேல் ஏறமுடியாது. ஆகவே மற்ற மூவர்க்காக ஜீப் ஒன்று அமைத்துக்கொண்டு அதில் நாம் சென்றோம். டிரக்கும் ஜீப்பும் மலைப்

பாதையில் விரைந்தன. பாதை செப்பனிடப்படாமல் கல்லும் கரடுமாக இருந்தது. இதில் 40 கிலோ மீட்டருக்கு மேல்பட்ட வேகத்தில் டிரக்கும் ஜீப்பும் ஓடின. அத்துணை வேகத்தில் சென்றால்தான் ஓடமுடியுமாம். வேகம் குறைந்தால் கற்களில் தடைபட்டு நின்று விடுமாம். டிரக்கில் ஏற்றிய சாமான்களின் நெருக்கடியால் யாத்திரீகர்கள் வருந்தினர். சைனர் ஏற்றிய சிலசாமான்களின் கொடிய நாற்றமும் தோற்றமும் பெரிதும் அருவருப்பை ஊட்டின. டிரக்கின் வேகத்தால் ஆட்டமும்குலுக்கலும் தாளமுடியாமல் பலர் ஒருவருடன் ஒருவர் மோதிக்கொண்டனர். சிலர் காயமுற்றனர். இந்த டிரக்கில் பிரயாணம் செய்தவர்க்கு இனிமேல் யமவாதனையே இல்லை என்றுதான் சொல்லத் தோன்றுகிறது. இத்துணை வேதனையையும் ''கயிலையைக்காணப்போகிறேம்'' என்றநினைப்பில்அவர்கள் மறந்துவந்தனர்.

இவ்வண்ணம் 60 கி. மீ. சென்றதும் திரிகூடமலையும் ராக்ஷஸ தடாகமும் வந்தன. அங்கே இறங்கினேம். ராக்ஷஸ தடாகக் கரையிலிருந்து [50 கி. மீ.தொலைவுக்கு அப்பால்] கயிலைச் சிகரத்தின் தரிசனம் முதன்முதலாக நமக்குக் கிடைத்தது. அன்றுநாம் மௌனமாகையால் அருகிலிருந்தவர்களைக் கைதட்டி அழைத்துக் கயிலையைச் சுட்டிக் காட்டினேம். கயிலைச்சிகரத்தைத் தரிசித்து அடியற்றமரம்போல் நிலத்தில் வீழ்ந்துவணங்கினர். கயிலைக்காட்சியைக் கண்டவுடன் நம்மை நாம்மறந்தோம் உள்ளம்குளிர்ந்தது. உரோமம்சிலிர்த்தது. கண்ணும் பொழிமழைபெய்தது கையும்தாமே புனைஅஞ்சலியதாய்உயர்ந்தன. மெய்யும் தரைமிசை விழுமுன்புஎழுந்தது. அவ்வனுபவத்தை மேலும் உரையால் கூறஇயலாது. 'இங்ஙன் இருந்ததென்று எவ்வண்ணம் சொல்லுகேன், அங்ஙன் இருந்ததென்று உந்தீபற, அறியும் அறிவதன்று உந்தீபற' என்ற அருள் அனுபவத்தையே கூற இயலுகிறது.

மீண்டும் டிரக்கும் ஜீப்பும் புறப்பட்டன. 20 கி. மீ. சென்றதும் காலை 10·00க்கு [சீ நே 12-30மணிக்கு] மானஸ சரோவரத்தில் உள்ள செய்த்தி கேம்பை அடைந்தோம். மானஸ சரோவரத்தில் நீராடி மகிழ்ந்தோம. வழிபாடு செய்தோம்.

மீண்டும் டிரக்கும் ஜீப்பும் புறப்பட்டன. 30 கி மீ.சென்றதும் காலை 11-30 மணிக்குக் கைலையின் அடிவாரத்தில்உள்ள டார்ச்சென்கேம்பை அடைந்தோம். இது கயிலையின் தெற்குப்புறத்தில் உள்ளது. இங்கே கயிலையின் தெற்குமுகதரிசனம் மிகவும் நன்றாகக் கிடைத்தது. மப்பு மந்தாரம் எதுவும் இன்றி மிகத்தெளிவாகக் கயிலை நாதன் காட்சி அளித்தான்.

16-7-82 வெள்ளியன்று காலை 6மணிக்குக் கயிலையின் தெற்கு முகதரிசனம் செய்து கொண்டோம். அந்த மகிழ்ச்சியோடு நாமும் நம்மவர் பதின்மரும் டார்ச்சேன் கேம்பிலிருந்து கயிலைப்பரிக்கிரமம் செய்யத் தொடங்கினோம். பரிக்கிரமம் என்பது வலம் வருதலாகும் கயிலைப் பரிக்கிரமம் செய்ய 48 கி. மீ. நடக்க வேண்டும். இதனை இரண்டு நாளில் முடிக்க வேண்டும். இதற்கிடையில் ஓரிடத்தில் தங்கவேண்டும்.

திபேத்தில் வாழும் மக்கள் திருக்கயிலைமலையைப் பன்முறை பரிக்கிரமம் செய்கிறார்கள் தொடங்கும் இடத்தில் கீழே வீழ்ந்து நமஸ்காரம் செய்கிறார்கள் கையும் காலும் பட்ட இடங்களில் கோடிட்டுக் கொள்கிறார்கள் பிறகு எழுந்து, கால் வைத்த கோட்டிலிருந்து கைவைத்த கோடுவரை அடிமேல் அடிவைத்து நடக்கிறார்கள் கைவைத்த கோடுவந்ததும் அக்கோட்டில் கால்வைத்து நமஸ்காரம் செய்கிறார்கள். கைவைத்த இடத்தில் முன்போலவே கோடிட்டுக் கொண்டு எழுந்து நடக்கிறார்கள். இப்படியே பரிக்கிரமம் செய்து முடிக்க அவர்களுக்குப் பல நாளாகும். இந்த நாட்களுக்காக அவர்கள் ஆகாரம் கொண்டு செல்வதில்லை. வழியில் யாராவது உணவுகொடுத்தால் உண்கிறார்கள். இல்லையேல் பட்டினியாகவே வலம் வருகிறார்கள்

நாமும் நம் குழுவைச்சார்ந்த 10பேரும் சாதாரண முறையில் நடந்து பரிக்கிரமத்தைத் தொடங்கினோம். தெற்குப் பகுதிக்கு வந்தோம். இங்கே கயிலைமலை 590 அடி உயரத்துக்குச் செங்குத்தாக மதில்போல் அமைந்திருக்கிறது. நம் நாட்டுத் திருக்கோயில் அமைப்புக்கள், ஓரளவு சிற்பஅமைப்பு யாவும் கயிலை மலையின் சுவர்ப்பகுதியில் இயற்கையாக அமைந்துள்ளன.

இராசசிம்மபல்லவன் காஞ்சிபுரத்தில் கைலாச நாதர் கோயிலைக் கட்டும்போது கயிலை சென்று அங்குள்ள அமைப்புக்களைக் கண்டு அமைத்தான் என்று சொல்லப்படுகிறது.

கயிலையின் மேற்குமுகத்தின் தரிசனம் செய்துகொண்டு, வட மேற்கில் அமைந்திருந்த டேராபுக் என்ற கேம்பில் அன்று இரவு தங்கினோம். அன்றிரவு சிறிது மழைத்தூரல் இருந்தது. கடும் குளிராகவும் இருந்தது. இரவில் கயிலாயப் பதிகங்கள் ஓதினோம்.

17—6—82 சனிக்கிழமை அதிகாலை கூடாரத்திலிருந்து வெளியில் வந்தபோது ஆங்காங்கே குழிகளில் தேங்கிய தண்ணீரின் மேல்

பனிட்பாளங்கள் கண்ணுடிபோலப் படிந்திருந்திருந்ததைத் கண்டோம் பின்பு வடபகுதியில் பரிக்கிரமத்தைத் தொடர்ந்தோம்.

வடகிழக்குப்பகுதியில் மிகப்பெரிய ஏற்றம் வருகிறது. இந்த இடம் தோல்மாபாஸ் என்று கூறப்படுகிறது. இங்கே வடகிழக்கு முக தெரிசனம் செய்தோம். தோல்மாபாஸின் இறக்கத்தில் கௌரி குண்டம் என்ற தடாகம் இருக்கிறது. இங்கே செல்வதற்குச் சரியான பாதை இல்லை. இருப்பினும் நாம் கீழே இறங்கிச்சென்று கௌரி தடாகத்தில் நீராடினேம் பிறகு மேலே ஏறிப் பரிக்கிரமத்தைத் தொடர்ந்தோம்.

சிறிது தொலைவு சென்றதும் ஒரு சிறிய குகையைக் கண்டோம். குகைக்குள் தண்ணீர் தேங்கி இருந்தது. அட்போது அவ்விடப் பரிக் கிரமம் செய்து கொண்டு வந்த லாமா ஒருவர் அத்தீர்த்தத்தைத் ''கயிலைத்தீர்த்தம்'' என்று சொல்லித் தெளித்துக் கொள்ளும்படி சைகை காட்டினர்.

கிழக்குப் பகுதியில் பரிக்கிரமம் செய்யும்போது கிழக்குமுகத் தரி சனம் செய்தோம். பிறகு இரவு 7 மணிக்குத் தெற்குப்பகுதியில் உள்ள டார்ச்சேன் கேம்பிற்கு நாம் வந்து சேர்ந்தோம். நம்முடன் வந்தவர்கள் பின்தங்கி நடந்தபடியால் ஒவ்வொருவராக இரவு 12 மணிவரை கேம்பிற்கு வந்தார்கள்.

18-6-82 ஞாயிறன்று காலை டார்ச்சேன் கேம்பிலிருந்து நரோ புஞ்ச் என்ற சிகரத்திற்கு ஏறிச்சென்றேம். அன்றைக்குப்பிரதோஷம். நாரோ புஞ்சிலிருந்து கயிலைத் தரிசனம் மிகமிக நன்ருகக்கிடைத்தது. அவ்விடம் 11 சாளக்கிரமக் கற்களைப் பிரதிஷ்டைசெய்து நாம் ஏகா தசருத்ரபூசை செய்தோம். அபிஷேக ஆராதனை செய்து கற்பூரதீபா ராதனை செய்தோம். கற்பூரம் அருகில் இருந்த ஒருசெடிமேல் தற் செயலாகப் பட்டபோது அந்தப் பச்சைச் செடி பற்றி எரிந்தது. அப்போது உமாபதி சிவாச்சாரியார் முள்ளிச் செடிக்கு முத்திகொடுத் தது நினைவுக்கு வந்தது. இதுநமக்கு பெரிய வியப்பாகஇருந்தது. பிறகு விசாரித்தபோது அத்தகைய செடி பச்சையாகவே எரியும் இயல்புடை யது என்பது தெரியவந்தது. வழிபாடு முடிந்தபின்பு நாரோ புஞ்சிலி ருந்து டார்ச்சேன் கேம்பிற்குத் திரும்பி இரவு அங்கே தங்கினேம்.

19-7-82 திங்களன்று காலை வானம் மப்பும் மந்தாரமுமாக இருந் தது. இதனல் டார்ச்சேன் கேம்பிலிருந்து கயிலைக் காட்சி கிடைக்க

வில்லை. அதனால் மனத்தில் சிறிது தயக்கம் ஏற்பட்டது திருநாவுக்கரசரிடம் திருவையாற்றில் வருக என்று கூறி இறைவன் மறைந்தாற்போல நமக்கும் விண்ணிலே மறைந்த அருள்புரிபவனாக ஆகிவிட்டான் போலும். பிறகு டார்ச்சேன் கேம்பிலிருந்து கிளம்பி டிரக்கிலும் ஜீப்பிலும் பயணம் செய்து பகல்1மணிக்கு மானசசரோவரத்தில் உள்ள செய்த்திகேம்புக்கு வந்துசேர்ந்தோம். மானசசரோவரத்தில் மனங்குளிர நீராடினோம். அன்று இரவு செய்த்தியில் தங்கினோம்.

20-7-82 செவ்வாயன்று ஆடி அமாவாசை. அதிகாலையில் மானச சரோவரத்தில் அனைவரும் நீராடினோம்.

மானசசரோவரம் பெரிய ஏரி. 88 கி.மீ சுற்றளவு உடையது. சுமார் 250அடி ஆழமுடையது. இது கயிலை மலைக்குத் தென்புறத்தில் 30 கி.மீ. தொலைவில் இருக்கிறது. கயிலைமலை சிவபெருமானின் திருவுருவாகவும் மானசசரோவரம் உமாதேவியின் திருவுருவாகவும் கருதி வழிபடப் பெறுகிறது. தூரப் பார்வைக்குத் தண்ணீர் உமையாள் போலப் பசுமையாகத் தெரிகிறது. கையில் அள்ளினால் நிறம் ஏதும் இன்றிப் பளிங்கு போல் இருக்கிறது. தண்ணீரில் பனிப் பாறைகள் மிதக்கின்றன. தண்ணீரின் அடியில் பசுமை பொன்மை வெண்மை நீலம் முதலிய பல்வேறு வண்ணக் கற்கள் கிடைக்கின்றன. நீராடும்போது நம்முடன் வந்தவர்களில் சிலர் சிறு பிள்ளைகளைப்போல அக்கற்களில் சிலவற்றை எடுத்து வந்தார்கள். கயிலை மலையைப் பரிக்கிரமம் செய்வதுபோல மானச சரோவரத்தையும் பரிக்கிரமம் செய்வது வழக்கம்.

அன்று இரவு மானச சரோவரத்தில் உள்ள செய்த்தி கேம்பில் தங்கினோம். மாலை 6முதல் 9மணி வரை சத் விஷயங்கள் பற்றிச் சிந்தனை செய்தோம். திருநாவுக்கரசு சுவாமிகள் கயிலாயக் காட்சி கண்ட நாளாகையால் அவர்தம் வரலாறு குறித்துக் காஞ்சி ஆதீன கர்த்தர் அவர்களும் பேரூர் சுவாமிகளும் விரிவாகப் பேசினார்கள்.

21-7-82 புதனன்றும் மானச சரோவரத்தில் நீராடினோம். இரவு அங்கே தங்கினோம்.

22-7-82 வியாழனன்று பகல் 2மணிக்குச் செய்த்தி கேம்பிலிருந்து டிரக் புறப்பட்டது. நாம் ஜீப்பில் சென்றோம். மாலை 6மணிக்குத் தக்ளகோட் வந்து சேர்ந்தது. இரவு அங்கே தங்கினோம்.

23-7-82 வெள்ளியன்று தக்ள கோட்டில் சினமுகாமில் சுங்கப் பரிசோதனை நடைபெற்றது பகல் 2மணிக்குச் சாமான் மூட்டைகள் குதிரை மேல் ஏற்றப்பட்டு அவை முன்னதாக அனுப்பப் பெற்றன. இரவு 2மணிக்கு நாமும் மற்றவர்களும் குதிரையில் பயணம் தொடங்கினோம். கடுமையான இருளில் குதிரைகள் பழக்கத்தால் ஒருவாறு வழி தெரிந்து நடந்தன. இருளும் வழியின் அச்சமும் மனத்தை உருத்தின. கயிலை நாதன் திருவருள் தான் துணை வந்து காத்தது என்று சொல்ல வேண்டும். குதிரையிலிருந்து சிலர் வழுக்கி விழுந்ததும் உண்டு. ஒருவாறு சமாளித்து மீண்டும் குதிரையில் ஏறிப் பயணம் தொடர்ந்தனர்.

24-7-82 சனியன்று காலை 10.30க்கு இந்திய எல்லையான லிப்புபாஸ் என்ற இடத்தை அடைந்தோம். அங்கே சிறிது மழைத்தூறல் இருந்தது. நான்காவது குழுவினர் இந்தப் பகுதியில் எதிர்கொண்டு ஒருவரை ஒருவர் கட்டித் தழுவிய வண்ணம் ஆனந்தக் கண்ணீர் பெருக்கெடுக்க ''கயிலை மலையானுக்கு ஜே! கயிலை மலையானுக்கு ஜே!'' என்ற பக்திக் கோஷங்கள் எழுப்பினர். பகல் 1மணிக்கு நாபிடாங் என்ற இடத்தை அடைந்து பகல் உணவு அருந்தினோம். அங்கிருந்து கிளம்பி மாலை 5மணிக்குக் காலாபாணியை அடைந்து இரவு அங்கே தங்கினோம்.

25-7-82 ஞாயிறன்று காலை 9மணிக்குப் புறப்பட்டு பகல் 2மணிக்குக் குஞ்ஜி என்ற இடத்தை அடைந்தோம். இங்கே தண்ணீர் கிடைப்பது அரிதாயிருந்தது.

குஞ்ஜிக்கு 40கி மீ தொலைவில் சிறுகயிலாயம் (மினி கைலாஸ்) இருக்கிறது. இங்கே ஆண்டு தோறும் மேளா என்ற விழா நடைபெறும் என்று கூறுகிறார்கள். அன்றிரவு குஞ்ஜியில் தங்கினோம்.

26-7-82 திங்களன்று காலை8மணிக்குப் புறப்பட்டு மாலை4மணிக்குப் புறப்பட்டு மாலை 4 மணிக்குப் புத்தி என்ற இடத்தை அடைந்து இரவு அங்கே தங்கினோம்.

27-7-82 செவ்வாயன்று காலை8மணிக்குக் கிளம்பி 9கி. மீ. நடந்து பகல் 1மணிக்கு மால்பா என்ற இடத்தை அடைந்தோம். வழிமிகவும் இறக்கமாக இருந்தது. இரவு மால்பாவில் தங்கினோம். யாத்திரையில் ஒவ்வொரு இடத்திலும் ஈயின் தொல்லை உண்டு. மால்பாவில் ஈயின் தொல்லை மிகவும் அதிகமாக இருந்தது.

28-7-82 புதனன்று காலை மால்பாவில் புறப்பட்டு 9 கி. மீ. நடந்து ஜிப்தி என்ற இடத்தை அடைந்தோம். வழிஏற்றமாகவும் மண் சரிவு நேரும் அபாயமுடையதாகவும் இருந்தது. ஜிப்தியில் அன்றிரவு தங்கினோம். இங்கே இந்திய இராணுவ வீரர்கள் பலர் தமிழ் நாட்டவராக இருந்தார்கள். அவர்கள் நம்மவர்களுடன் தமிழில் பேசினார்கள். இதுவரை தமிழ்பேசுவோரைக் காணாதிருந்த ஆதங்கம் இங்கே விலகியது. மனத்திற்கு உற்சாகமும் ஏற்பட்டது.

29-7-82 வியாழனன்று காலை ஜிப்தியில் புறப்பட்டுச் சிர்க்கா வந்து சேர்ந்து பகல் உணவு அருந்தினோம். சிர்க்காவிலிருந்து 5 கி. மீ. தொலைவில் உள்ள நாராயண் ஆஸ்ரமத்துக்கு வந்து சேர்ந்தோம். ஆஸ்ரமத்தார் நமமுடன் வந்தவர்களுக்குத் தென்னிந்திய உணவாகச் சிறந்த விருந்தளித்தார்கள். ஆஸ்ரமத்திற்குநாம் நன்கொடை வழங்கினோம். வந்தவர்களில் சிலரும் ஆசிரம வளர்ச்சிக்காக நன்கொடை வழங்கினார்கள். அன்றிரவு ஆஸ்ரமத்தில் தங்கி இருந்தோம்.

30-7-82 வெள்ளியன்று காலை 7 மணிக்குப் புறப்பட்டோம். பகல் 1 மணிக்குத் தவாகாட் வந்து சேர்ந்தோம். இத்துடன் நடைப் பயணம் முடிந்து விடுகிறது. பேருந்து ஆயத்தமாக இருந்தது. சாமான்கள் நிறையிடப்பட்டுப் பேருந்தில் ஏற்றப்பட்டன. அனைவரும் பேருந்தில் ஏறினோம். பேருந்து புறப்பட்டது. டார்ச்சூலா வந்ததும் பகல் உணவு அருந்தினோம். மீண்டும்மாலை 4 மணிக்குப் பேருந்து புறப்பட்டது பெட்ராகாட் என்ற இடத்தை அடைந்து இரவு அங்கே தங்கினோம்.

31-7-82 சனியன்று காலை பெட்ராகாட்டிலிருந்து பேருந்து கிளம்பியது. வழியில் சம்பாவதில்காலை உணவும் ருத்திரபூரில் பகல்உணவும் அருந்தினோம். இரவு 10. 15க்குத் தில்லி வந்து சேர்ந்தோம். தில்லித் தமிழ்ச்சங்கத்தில் தங்கினோம்.

1-8-82 ஞாயிறன்று தில்லித் தமிழ்ச்சங்கத்தார் பெரியதொரு வரவேற்பளித்தார்கள். நாமும், காஞ்சிபுரம் சந்நிதானம் அவர்களும் பேரூர் அடிகளார் அவர்களும் யாத்திரையைப் பற்றி விரிவுரையாற்றினோம்.

தருமையாதீனம் ஸ்ரீ ல ஸ்ரீ கயிலைக்குருமகா சன்னிதானம் அவர்கள் கயிலாய யாத்திரை நிறைவு செய்து தில்லிக்கு எழுந்தருளிய போது தமிழ்ச் சங்கக் கட்டடம் நிறைவு பெறாத நிலையிலிருந்தது

அதற்கு அவர்கள் 1000 நன்கொடை அளித்தார்கள். அந்தக்கட்டத்திலேயே நாம் தங்கினேம் தற்போது ஆடிடோரியம் கட்டவிருப்பதறிந்து நாமும் 1008 நன்கொடை அளித்தோம், அன்றியும் தில்லித் தமிழ்ச் சங்கத்தார் கேட்டுக்கொண்டபடி ஆண்டுதோறும் தமிழ்ச் சங்கத்தில் சைவச் சொற்பொழிவாற்ற அறக்கட்டளை அமைப்பதாகச் சொற்பொழிவின் போது உறுதியளித்தோம்.

அன்று இரவு உத்தரசுவாமி மலையில் அபிஷேக ஆராதனைகளை நாம் நடத்தி வைத்தோம்.

பகல் 1-45மணிக்குத் தில்லியிருந்து காசிக்கு ரயில் பயணம் தொடங்கியது.

3—8—82 செவ்வாயன்று காலை 6-45மணிக்குக் காசியை அடைந்தோம். அன்று ஆடிப்பதினெட்டாம் பெருக்கு அனைவரும் கங்கை நீராடினேம். கேதார நாதர் விசுநாதர் தரிசனம் செய்தோம். காஞ்சிபுரம் குருமகாசந்நிதானம் அவர்களும், பேரூர் தவத்திரு அடிகளார் அவர்களும் நம்முடன் நமது திருமடத்தில் எழுந்தருளி இருந்தார்கள்.

4—8—82 புதனன்று காசி விசுவநாதருக்கும் 5—8—82 வியாழனன்று அன்னபூரணிக்கும் விசேஷ ஆராதனைகள் நடத்தப்பெற்றன. 6—8—82 வெள்ளியன்று நம் மடாலயத்தில் சாதுக்களுக்குப்பண்டாராவும் கேதாரீஸ்வரர்க்கு அபிஷேக ஆராதனையும் 7—8—82 சனியன்று சங்கடா தேவிக்கு ஆராதனையும் 8—8—82 ஞாயிறன்று 200 பேர்க்குப் பிராம்மணபோஜனமும் நடத்தப்பெற்றன.

9—8—82 திங்களன்று கேதாரீஸ் வரர்க்கு விசேஷய் ஆராதனையும் கால பைரவர்க்கு விசேஷ ஆராதனையும் செல்க்கலாயிற்று.

10—8—82 செவ்வாயன்று காலை 5—15க்குக் காசியிலிருந்து சென்னைக்குப் புறப்பட்டோம்.

11—8—82 புதனன்று இரவு 10மணிக்குச் சென்னைப் புகைவண்டி நிலையம் சேர்ந்தோம். அப்போது திருநள்ளாறு கட்டளைத் தம்பிரான், Dr. B நடராஜன், திரு கி. இராமலிங்க முதலியார், திரு பக்தவத்சல முதலியார், திரு. ஆறுமுக முதலியார், திரு. க. சுப்பிரமணிய அய்யர், சிதம்பரம் திரு பாலசுப்பிரமணிய செட்டியார், திருச்சி திரு வெங்கடாசலம் செட்டியார், திரு. மூக்கப் பிள்ளை, திரு. தாமோதரம்

முதலியார், மற்றும் சைவமெய் அன்பர்கள் சைவ சித்தாந்தப் பேரவையினர் முதலானோர் பெருந்திரளாக வந்திருந்து பேரன்புடன் நம்மை வரவேற்றார்கள்.

பிறகு தருமை ஆதீனம் பிரசார நிலையத்திற்குச் சென்றோம்; திருநள்ளாறு கட்டளைத் தம்பிரான் தருமை ஆதீனச்சார்பில் வரவேற்று நமக்கும் காஞ்சி சுவாமிகளுக்கும் பொன்னாடை போர்த்தினார்கள்; சென்னை பக்தவசல முதலியார் அவர்கள் நமக்கும் காஞ்சி சுவாமிகள் அவர்களுக்கும் பொன்னாடை போர்த்தினர். திரு க. சுப்பிரமணியஐயர் ஆறுமுக முதலியார் ஆகிய இருவரும் வரவேற்பு வாசித்தளித்தனர். நூற்றுக்கணக்கான அன்பர்களுக்குக் கயிலைப் பிரசாதம் வழங்கப் பெற்றது.

12-8-82 வியாழனன்று காஞ்சிபுரம் சந்நிதானம் அவர்களும் நாமும் காஞ்சிபுரம் சென்றோம். அங்கே மடாலயத்தில் பெரிய வரவேற்பு நடந்தது. பிறகு ஏகாம்பரநாதர் கோயில், கயிலாசநாதர் கோவில் முதலிய பல கோயில்களிலும் வழிபாடுசெய்யலாயிற்று. சென்னை திரும்பினோம்.

13-8-82 வெள்ளியன்று சென்னைக் கபாலீஸ்வரர் கோயில், மாங்காட்டுக் கோயில், திருவேற்காடு கருமாரியம்மன் கோயில்களில் வழிபாடு நடத்தலாயிற்று.

14-8-82 சனியன்று தருமையாதீன பிரசார நிலையத்தில் சென்னையன்பர்கள் பலரும் கூடிப் பெரியதொரு வரவேற்பளித்தார்கள்.

15-8-82 ஞாயிறன்று விடியல் 4 மணிக்குச் சென்னையில் புறப்பட்டு காலை 10 மணிக்குப் பனசையை அடைந்தோம். ஸ்ரீ காசிமடத்துச் சிப்பந்திகளும், நம் கல்லூரி பேராசிரியர்களும், உள்ளூர் வெளியூர்ப் பிரமுகர்களும், பொதுமக்களும் பெருந்திரளாகக் கூடிப் பெரிய வரவேற்பளித்துத் தத்தம் வணக்கத்தையும் தெரிவித்துக்கொண்டார்கள். நம்மைக் காணவந்தவர்களின் ஆர்வம் கரைபுரண்டோடியது. அவர்களைக் கட்டுப்படுத்த முடியவில்லை. நண்பகலில் அன்பர்கள் அனைவருக்கும் நம் மடாலயத்தில் விருந்தளிக்கப்பெற்றது.

எல்லோர்க்கும் கயிலாய நாதனின் திருவருள் உண்டாவதாகுக.

—சிவ சிவ

# ஸ்ரீ குமரகுருபரர்

தொகுதி 4 கயிலைச் சிறப்பிதழ் பகுதி 12

## வரவேற்பும் வாழ்த்தும் வணக்கமும்

ஸ்ரீலஸ்ரீ காவசி எஜமான் சுவாமிகள் அவர்கள் திருக் கயிலாய யாத்திரை செய்து கொண்ட அருளனுபவக் குறிப்புக் களை மன்பதை உய்ந்திடேறக் கட்டுரையாக வழங்கியருளியுள் ளார்கள். அஃதுஇச்சிறப்பிதழின் மணி மகுடமாக முன்னமைந் துள்ளது.

மெய்யன்பர்கள் நித்ய பூஜை யுள் வைத்து நாளும் கயிலாய நாதனை நினைந்துய்யும் பொருட்டு மூவண்ணப் படங்கள் இரண்டு அட்டையிலும் முதலிலுமாக அச்சிடப் பெற்றுள்ளது.

அட்டையின் மற்றொருபக்கம் ஸ்ரீலஸ்ரீ காசிவாசி எஜமான் சுவாமிகள் அவர்கட்குத் தருமை ஸ்ரீலஸ்ரீ குருமகா சன்னிதானம் அவர்கள் 16-8-82 அன்று 'கயிலை மாமுனிவர்' என்னும் சிறப்புப் பெயர் சூட்டி வழங்கியருளிய விருதுப்பட்டய வாசகங்கள் அச்சிடப் பெற்றுள்ளன.

டெல்லி, சென்னை, திருப்பனந்தாள், தருமபுரம் கதிராமங்கலம், சிதம்பரம், கும்பகோணம் முதலிய பல இடங் களில் ஸ்ரீலஸ்ரீ காசிவாசி எஜமான் சுவாமிகள் அவர்கட்கு வரவேற்பு வைபவங்கள் வெகு சிறப்பாகச் சைவ நல்லுளம் கொண்ட சான் றோர்களால் நிகழ்த்தப் பெற்றன. அந்த நிகழ்ச்சிகள் யாவும் உற்சாகம் நிறைந்தவை. புது வரலாறு படைத்த பொலிவு உடையவை.

கும்பகோணம், மாயூரம் வட்டச் சைவப் பேரன்பர்களால் 12-9-82 அன்று அருள்மிகு ஆதி கும்பேசுவரர் திருக்கோயிலில் நடைபெற்ற பெருவிழாவில் தருமையாதீனகர்த்தர் ஸ்ரீலஸ்ரீ குருமகா சன்னிதானம் அவர்கள், தலைமை தாங்கிக் கயிலை சென்று வந்த காஞ்சி ஸ்ரீலஸ்ரீ மகா சன்னி தானம் அவர்கட்கும் பேரூர் தவத் திரு அடிகளார் அவர்கட்கும் கயிலைப் புனிதர் என்ற சிறப்புப் பெயர் சூட்டிஅருளினார்கள். ஸ்ரீலஸ்ரீ காசிவாசி எஜமான் சுவாமிகள் அவர்கட்கும் காஞ்சி சுவாமிகள், பேரூர் அடிகளார் ஆகியோர்க்கும் பொன்னாடை சார்த்திப் பாராட்டு வாழ்த்துரைவழங்கியருளினார்கள்.

எல்லா ஊர்களிலும் நிகழ்ந்த நிகழ்ச்சிகளை முற்றும் விமரிசிக்கக் காலமின்மையால் அந்நிழ்ச்சி களில் அன்பர்கள் அளித்த வரவேற்பு வாழ்த்து, வணக்கப் பத்திரங்களை மட்டிலும் தொகுத்துச் சில பகுதிகள் அச்சிடப்பெற்றுள்ளன:

தி. ஆ-ர்

## 11—8—82 அன்று சென்னையில் நடைபெற்ற ஆத்திக உலகிற்குப் புத்துணர்ச்சி தந்த வரவேற்பு விழாவில்

### திரு க. சுப்பிரமணிய ஐயர் அவர்களும், திரு வே. நா. ஆறுமுக முதலியார் அவர்களும் அளித்த நல்வரவேற்பிதழ்

திருப்பனந்தாள் ஸ்ரீ காசிமடத்து அதிபர்களாக 21-ம் பட்டத்தில் விளங்கிவரும் ஸ்ரீலஸ்ரீ சுவாமிகள் அவர்கள் ஆட்சி பீடத்திற்கு வந்த பத்தாண்டதனில் கயிலைப் பெருமானைத் தரிசித்த நற்பேறு பெற்றதனை மகிழ்ச்சியுடன் போற்றுகின்றோம். இது ஸ்ரீகாசிமடத்து வரலாற்றில் ஒரு பெரிய புண்ணிய நிகழ்ச்சியாகும். சைவ உலகத்திற்கே இந் நிகழ்ச்சி ஒரு பெருஞ்சிறப்பைத் தருவதாகும். உண்மையில் சிகரம் வைத்த செயலன்றோ!

ஸ்ரீலஸ்ரீ சுவாமிகள் அவர்கள் 10 ஆண்டுகட்கு முன்னர் ஆட்சி பீடம் ஏறினும் ஸ்ரீலஸ்ரீ அருள்நந்தி சுவாமிகள் அவர்களால் 1960-ம் ஆண்டிலேயே தேர்ந்தெடுக்கப்பெற்று அவர்களுடைய பூரண ஆசியைப் பெற்று மடத்துத் திருப்பணிகளையும், நிர்வாகத்தையும் சிறப்பாக நடத்திவந்த பெருமைக்குரியவர்கள்.

இடையே ஏற்பட்ட இன்னல்களையும் பொருட்படுத்தாது மிக்க பொறுமையுடனும் மனவுறுதியுடனும் நல்ல வகையில் ஸ்ரீகாசிமடம் தழைத்து இனிதோங்க நாளும் தொண்டாற்றி வந்தமை என்றும் மறக்க முடியாததாகும்.

ஆண்டுதோறும் சிலத்துடன் சுவாமிகள் அவர்கள் பற்பல தலங்களைத் தரிசித்து வருவதோடன்றி ''ஆலயப் பூசை நிதி'' என்ற பெயரில் ஒருசிறந்த கருவூலத்தை வளர்த்துக்கொண்டு தெய்விகப்பணிகளில் ஈடுபட்டு வருவது குறிப்பிடத் தக்கதாகும்.

செந்திலாண்டவன் திருப்பதிக்கு ஸ்கந்தசஷ்டி திருவிழாக் காலத்தில் தவறாது ஆண்டுதோறும் எழுந்தருளி விரதம் பூண்டு வழிபாடாற்றுவதின் பயனே ஒருவகையில் கடினமான யாத்திரைகளை மேற்கொள்ளச் சுவாமிகளுக்குத் திருவுளம் பற்றியது போலும்.

ஸ்ரீ குமரகுருபர சுவாமிகள் அடிச்சுவட்டில் ஸ்ரீகாசிமடத்து அறங்களை வளர்த்து வருவது போற்றத் தக்கது. அவர் பெயரால் விளங்கும் ஸ்ரீ குமரகுருபரர் பத்திரிகையும் அச்சகமும் இப்பொழுது பனசையிலே

அமைக்கப்பெற்றுச் சிறந்த நூல்களைப் பதிப்பிக்கச் செய்து வருவது அடியார்கள் பெற்றுவரும் பாக்கியமே.

தவத்திரு சுவாமிகள் அவர்கள் பல குடமுழுக்கு விழாக்களில் சிறந்த பங்கேற்றவர்கள்; சைவ சித்தாந்த மாநாட்டைக் காசியம் பதியில் இவ்வாண்டில் சிறப்புடன் நடத்தியவர்கள்; திருக்கேதாரத்தைப் பலமுறை தரிசித்தவர்கள். சென்ற ஆண்டில் வசதிகளைக் கருதாது அடியார்களுடன் அமரநாதம் சென்று தரிசித்த புண்ணியம் புரிந்தவர்கள்.

மேலே குறிப்பிட்ட பல்வகைப் பண்புகளுடைய சுவாமிகள் அவர்கள் இப்பொழுது திருக்கயிலாயம் சென்று விண்ணுளுந் தேவர்க்கு மேலாய வேதியனைத் தரிசித்து அடியோங்களையெல்லாம் நன்னெறியில் ஈடுபடச் செய்ய இனிதே எழுந்தருளும் ஸ்ரீலஸ்ரீ சுவாமிகள் அவர்களை திசைநோக்கி வணங்கிச் ''சிவம்பெருக்கும் தலைவரேறே!'' வருக வருக என்று சிந்தித்து வந்தித்து அழைக்கின்றோம்.

''பரணியிற் பிறந்து தரணியாளும்'' ஸ்ரீலஸ்ரீ சுவாமிகள் அவர்கள் சிறப்புடன் காசிமடத்தில் தனிப்பெரும தலைவராக விளங்கிக் கொண்டு பல்லாண்டு வாழ்க எனப் பல்லாண்டு கூறுகின்றோம்.

''அண்டங் கடந்த பொருள் அளவில்லதோர்
ஆனந்த வெள்ளப் பொருள்
பண்டும் இன்றும் என்றும் உள்ள பொருள் என்றே
பல்லாண்டு கூறுதுமே''

## சென்னை சைவமெய்யன்பர்கள் சங்கம் அளித்த வரவேற்பு

(பாடல்யாப்பு வித்துவான் திரு. ப. வடிவேல் பிள்ளை)

அருள்நந்தி யாம்எங்கள் அன்பு மலர்த்தேன்
கருணைபொழி கற்பகப்பூங் கா

எந்தையராய் ஈன்றுளாய் எழில் தருமை ஆதீனத் திருந்த எங்கள்
முந்தையராம் தமிழ்மக்கள் முதிர்தவத்திற் கிரங்கியருள் முனிவராகித்
தந்தசிவ மெய்ஞ்ஞான குருஞான சம்பந்தர் மரபில் போந்து
செந்திலாண்டவன் மறவா எமதடிகாள் தேவரீர் வருகவாழ்க.

வருபிறவி தனையகற்றும் சிவபூசை முதலாய மாண்புற் றோங்கும்
திருமுறைபா ராயணஞ்செய் நியதிகடைப் பிடித்தொழுகும்
சிந்தையாள
பெருமிதங்கொள் கயிலையாத் திரைபலவும் செய்துவக்கும் அரிய ஞானி
பெருமைமிகு சமயநெறி பிறங்கிடவே அவதரித்த பெரியோய் வாழி!

தங்குபுகழ் தமிழ்நாட்டில் சமயநெறி பல்லாற்றால் தளரும் இந்நாள்
பொங்குதிருக் குரவர்கள்தம் பொறுப்பிதுவென் றுலகினர்க்குப்
புகட்டுமாப்போல்
எங்கெங்கும் எழுந்தருளி உரைபரப்பி சமயமறு மலர்ச்சி நல்கி
மங்குநிலை போக்கிடுநல் தம்பிரான் திருத்தொண்டு
விளம்பற் பாற்றே?

செந்தமிழும் வடமொழியும் சேர்ந்துபதி பசுபாசம் என்னச் செப்பும்.
முந்துபொருள் மூன்றுமேஅ நாதியெனும் சித்தாந்த
முடிபுகண்டோய்.
நந்தமிழின் ஆகமமும் நல்லதிரு முறைகளையும் நயந்து தந்தோய்
இந்தமா நிலத்தின்கண் எவருள்ளார்? நும்போல்வார் வாய்மை யீதே

அருள்படைத்த விழியுடையாய் அன்படைத்த உளமுடையாய்
ஆகமாதி
தெருள்படைத்த மதியுடையாய் திறல்படைத்த மனமுடையாய்
உலகில் தீய
மருள்படைத்தோர்க் கறிவூட்டும் வாக்குடையாய் எளியேமை
வாழ்வித்தாண்ட
பொருள்படைத்த திருப்பனந்தாள் தம்பிரான் பொன்னடிகள்
போற்றி போற்றி.

கற்றருக் கிருநிதியே கங்கைகுலத் தனிவிளக்கே கருணைக் குன்றே
செற்றருக் கும்மினியாய் சேர்ந்தார்தம் உயிர்த்துணையே
தேவலோகத்து
உற்றரும் வரவிரும்பும் உயர்பனசை ஆதீனத் தோங்கும் கோவே
நற்றாய்நேர் அன்புருவாம் தம்பிரான் நல்லடிகள் வாழ்க வாழ்க.

எத்தனையோ அறச்செயல்கள் எத்தனையோ திருப்பணிகள்
எண்ணிலாத
எத்தனையோ அர்ச்சனைகள் எத்தனையோ நற்செயல்கள்
இயம்பலாற்ற

எத்தனையோ தீர்த்தவகை எத்தனையோ தருமங்கள் ஏழைக் கான
எத்தனையோ செய்துமகிழ் தம்பிரான் சுவாமிகளே வாழ்க வாழ்க.

ஒலிகடல்சூழ் உலகமெல்லாம் ஒருநெறியாய்ச் சிவநெறியே
ஓங்கும்வண்ணம்
அலைபுனல்சேர் செஞ்சடையெம் அண்ணலார் தருமகவாய் அவதரித்த
கலைமலிசீர்த் திருப்பனந்தாள் கலைஞான சுவாமிகளின் கழல்கள்
வாழ்த்தி
நலம்மலிசீர்த் தம்பிரான் சுவாமிகளின் திருவருளைப் பெற்று
வாழ்வோம்.

வாழிவளர் திருப்பனந்தாள் வாழியருள் ஆதீனம் வளம்மிக் கோங்கி
வாழியநல் அறப்பணிகள் வாழியசீர்ச் சைவநெறி வாழி வாழி
வாழியவர் நற்றொண்டும் வாழிதமிழ்ச் சைவநெறி வாழி வாழி
வாழிமணி மயிலூரும் பெருமான்தன் திருவருளால் வாழி வாழி.

முத்தமிழைக் காத்துவரும் முத்துக் குமரனடி
சித்தத்தில் வைத்திடுவோம் தேர்ந்து.

முத்தி நெறிகாட்டும் முத்துக் குமரன்சொல்
தித்திக்கும் செந்தமிழ்த் தேன்.

தருமை ஆதீன பிரசார நிலையம் புலவர் திரு க. ஆறுமுகம் அவர்கள்
அளித்த வரவேற்பிதழில் ஒருபகுதி

உயர்கே தாரம் வடக்கினில் ஓங்கும்
லக்கத் திருபத் தைந்தா யிரம்மடி
சொக்கனின் அருளால் தொடர்ந்து நடந்தே
கயிலைக் காட்சி கண்டாய் போற்றி!
மயிலென அடியவர் மனமிக மகிழ
முகிலெனும் சிவநெறி முகிழ்த்திடச் செய்தோய்!
அகில்மணம் கமழுநின் அடிகளை
மனத்திடைப் பொருத்தி வணங்குகின் றேனே.

சென்னை சைவ சித்தாந்தப் பெருமன்றத்தினர் அளித்தது

பாடலமைப்பு, வித்துவான்: அம்பைசங்கரனார்.

அத்தனினற் றெண்டுகளில் ஆர்வத்தை
ஊட்டவல அணியைப் பெற்று
எத்தனையோ மடங்களினில் அதிபதிகள்
இருந்தாலும் எடுத்துக் காட்டாம்
சித்தநல முற்றுள்ள சீர்பெருகு
திருப்பனந்தாள் காசிவாசி
முத்திவழி காட்டு முத்துக் குமாரநல
சாமிமுதறிஞ! வாழ்க.

சைவசித்தாந் தந்நெறியே சார்பாகக்
கொண்டுள்ள சகத்து ளோர்க்குச்
சைவசித்தாந் தப்பெருமன் றந்தன்னின்
மாநாட்டுத் தலைமை பூண்டாய்
சைவசித்தாந் தத்தினையே சகலமொழி
யினர்களுமே அறியும் வண்ணம்
சைவசித்தாந் தப்பாடல் போதிக்க
வாரணாசிப் பீடம் கண்டாய்.

கயிலாய யாத்திரையை மேற்கொண்டு
கனிவுற்ற உள்ளத் தோடு
கயிலாயப் பெம்மானின் வாசமதைக்
கண்டுநல காட்சி பெற்றுக்
கயிலாய மெனும்காசி வாசியெனும்
நாமத்தைத் தனக்கே பூண்டு
கயிலாய மாத்தமிழி னகத்தினையே
ஆக்குநல தக்கோய்! வாழ்க.

தென்னாடு விளக்கமுறத் திகழ்சைவம்
சிறப்புறவே திகழும் நல்ல
தென்பாண்டிக் குமரகுரு பரமுனிவர்
வடநாட்டில் சீர்மிக் கோங்கும்
தென்னாட்டார்க் கரணுகக் குமாரசா
மிம்மடத்தைத் தெரியக் கண்டார்
தென்னாட்டின் திலகமுத்துக் குமாரநல
சாமி! அதைச் சிறக்கச் செய்தாய்

சிவப்பெருக்கும் திருமுறையும் சேர்மிகுநல்
சாத்திரமும் சிறக்கக் காணச்
சிவஞ்சிவமென் ஒலியோடு செழிப்பாக
நூல்களையே வெளியிட் டாய்நீ
சிவராச தானிதிருப் பனசைமுத்துக் குமாரநல
சாமி நல்லோய்!
சிவபெருமான் தண்ணருளால் சிறப்புறவே
பல்லாண்டு வாழ்க வாழ்க.

## 15-8-82 அன்று ஸ்ரீ காசிமடத்தில் நடைபெற்ற வரலாறு படைத்த மாபெரும் வரவேற்பு வைபவத்தில் காசிமடம் அலுவலர்கள் அளித்த வரவேற்புப் பகுதி:

சைவக் கொழுந்தாம் ஸ்ரீ ல ஸ்ரீ காசிவாசி எஜமான் சுவாமிகள் அவர்களே!

அருட்பனசைத் திருநகரின் அருள் பொதிந்த காசிமடத்து அதிபர் அவர்களே! வருக! வருக! கயிலாய நாதரைக் கண்ணாரக் கண்டு வழிபாடாற்றிய புண்ணிய சீலரே! வருக! வருக! மெய்ஞ்ஞான வாழ்வே! வருக! வருக! இந்நன்னாளில் தங்களின் திருவடி மலர்களைப் பெருமகிழ்ச்சியுடன் போற்றி வணங்குகிறோம்.

திருப்பெருகு சிவஞானச் செம்மலே!

சைவம் செழிக்கவும் தமிழ் தழைக்கவும் அரியபல அறக்கட்டளைகளை நிறுவிப்புரந்தருளும் அருளரசே! வருக! வருக! திருமுறைகளும் சித்தாந்தமும் தேசமெல்லாம் நன்குணர அரும்பணிகள் ஆற்றிவரும் அருட்பெருக்கே வருக வருக எனவாழ்த்தி வணங்குகிறோம்.

கயிலை கண்ட கண்ணாரமுதே!

ஈசன்திருக்கோயில் எல்லாமும் கைதொழுது நேசம் பெரிதுடைய சிந்தையால் கேதாரம் அமர்நாத் முதலிய கீர்த்திமிகு தலங்களையும் வழிபட்டு அதன்பயனாகத் திருக்கயிலையையும் வழிபட்ட தவக்கடலே வருக வருக எனமகிழ்ந்து அடிவணங்கி வரவேற்கின்றோம்.

காவாய் கனகத் திரளே போற்றி
கயிலைமலையானே போற்றி போற்றி

## ஸ்ரீ காசிமடத்தின் கிராமவாசிகள் அளித்த வரவேற்புரை:

**அறம்பல புரியும் அதிபர் அவர்களே! வருக!**

அன்னை வநதுர்க்கை அருள் மிகவும் பெற்ற திறத்தால் அறங்களுக்கு மலையெனவந்த இடர்களைப் பனியெனக் கடந்த பரிச்சயத்தால் பனிமால் இமய மலையின் கயிலைத் திருக்கோலத்தைக் கண்டு மகிழ்ந்த தவசீலரே! வருக வருக என வாழ்த்தி வணங்குகிறோம்.

**கருணைத் திறம் புரியும் கண்ணியமே! வருக!**

புனிதப் பெரும் யாத்திரையாகிய கயிலாய யாத்திரை செய்த ஸ்ரீகாசிமடம் முதல் அதிபர் என்ற பெருமை பொருந்திய தங்களைத் தெரிசிப்பது நாங்கள் பெற்ற பேறுதும் காட்சிக்கு எளியவராய் ஏழை எளியோரிடம் இன்னருள் செய்யும் இயற்கைக் குண மும் நிறைந்த எங்களை வாழ்விக்க வந்த துறவரசே! வருக! வருக! என வணங்கிப் போற்றுகிறோம்.

**அருளாட்சி செய்யும் அமுதே! வருக!**

கந்தன் அருளால் கவிமழை பொழிந்த ஸ்ரீ குமரகுருபரர் வழி வந்த எங்கள் இதயத் தெய்வமே! கல்விப் பணிகள், அறப் பணிகள் பக்தி நெறிப் பணிகள், பயிர் செழிக்கப் பாலிக்கும் பணிகள் யாவும் சிறக்கச் செய்யும் செம்மலே! பூரணமாகத் தெய்வ அருள் பெற்றுப் பொலியும் தங்களைத் தெரிசித்த இந்த மகிழ்ச்சிநிறை நன்னாளை வாழ் வெல்லாம் எண்ணியெண்ணி மகிழ்வோம். வருக வருக என வாழ்த்தி வணங்குகிறோம்.

## திருப்பனந்தாள் செந்தமிழ்க் கல்லூரி முதல்வரும் ஆசிரியர்களும் அளித்த வரவேற்பு

கருணை வெள்ளமெனத் தவிசிருக்கும் அருட் பெருக்கே!

செந்தில் மேய கந்தப்பெருமானின் திருவருளையும், சிற்பரம் உணர்த்தும் சற்குருவாகிய ஸ்ரீலஸ்ரீ மாசிலாமணி தேசிக சுவாமிகளின் குருவருளையும் ஒருங்கு பெற்றுத் திவ்வியம் பழுத்த சைவசித்தாந்தச் செந்நெறியை வளர்த் தருளிய ஸ்ரீ ஆதி குமரகுருபர சுவாமிகளேயாக

விளங்கியருளும் ஸ்ரீலஸ்ரீ காசிவாசி எஜமான் சுவாமிகள் அவர்களே! தன்னை யார்க்கும் அறிவரியான் என்றும் மன்னி வாழ் கயிலையாம் திருமாமலையைக் கண் குளிரக் கண்டு மாறிலா மகிழ்ச்சியில் திளைத்து வீற்றிருந்தருளும் தங்களை வருக வருக என வரவேற்று அடியோங்களின் பணிவார்ந்த வணக்கங்களைச் செலுத்திக் கொள்கிறோம்.

அருட் பெருகு தனிக் கடலே!

ஸ்ரீ காசி மடத்தின் இருபத்தோராவது அதிபராக எழுந்தருளியிருந்து குமரி முதல் இமயம் வரை எண்ணற்ற அறக்கட்டளைகளைப் பரிபாலித் தருளியும் சைவசமய சாத்திர தோத்திர ஞான நூல்கள் பலவற்றை வெளியிட்டருளியும், பல்வேறு ஆலயங்கட்குக் குட முழுக்குச் செய்வித் தருளியும், ஆலயப்படிக்காசு நிதி முதலியவற்றை நிறுவியருளியும், சிறுவர் கல்வி முதல் பல்கலைக் கல்வி வரையான கல்வி நிறுவனங்கள் பலவற்றைப் புரந்தருளியும் சைவமும் தமிழும் தழைத்தினி தோங்க அருள் பொழியும் பெருமுகிலே! வருக வருக எனப் பொன்னார் திருவடிகளைப் போற்றிப் பரவுகின்றோம்.

பொருட் சமய முதற்சைவ நெறிதான் பெற்ற புண்ணியக்கன்றே!

பனிமால் இமயப் பொருப்பின் கண்ணே கேதாரம், பத்ரிநாத், அமர்நாத் முதலான திருத்தலங்களை வழிபட்டுப் பத்தாம் ஆட்சி யாண்டின் நிறைவிலே ஊழி தோறூழி முற்றும் உயர்பொன் நொடித்தான் மலையும் வழிபடத் திருவுளங்கொண்டு உருவளர் உமையாள் திருவுருவான மானசசரோவரத்தையும் திருவளர்சிவனார் திருவுருவான கயிலாய மலையையும் கண்டு கண்டு உள்ளம் குளிரக் கண் குளிர்ந் தருளிய திருவருட் பேறே! வருக வருக என வணங்கி மகிழ்கின்றோம்

அன்பரகத் தமர்ந்தருளும் அருள் ஒளியே!

செந்தமிழ்ச் சொக்க நாதனார் திருவடித் தாமரைகளைச் சூடிய சென்னியும், தன்னடி அடைந்தார் மகிழ வரம்பலவும் தந்தருளும் தெய்வ முகத் தாமரையும், திருநாமம் அஞ்செழுத்தும் செப்பும் திருவாயும், தூய வெண்ணீறு துதைந்த பொன் மேனியும், தாழ் வடம் தைவரும் திருமார்பும், கதிரா மங்கலத்து அன்னையின் கருணைத் திருவுருவை அழகொழுக எழுதிப் பார்த்திருக்கும் திருவுளமும்

எண்ணற்ற அறக்கட்டளைகளை இடையறாது இயற்றிவரும் திருக்கரமும், மவுனவிரதமே முதலான பல மெய்த்தவத்தின் சார்பும் கொண்டு விளங்கும் தவ வடிவே! வருக வருக என வாழ்த்தி வணங்குகின்றோம்.

கண்ணின் மணியாகி நின்றாய் போற்றி
கயிலை மலையானே போற்றி போற்றி.

திருச்சி, பசிப்பிணிமருத்துவர்
திரு. மு. ஆ அருணாசல முதலியார் அளித்தது:

நற்றவத்து மாமுனிவர் நன்னெறியின் அவதாரம்
நாட்டார்கள் போற்றுகின்ற
சொற்றிறமும் சூழறிவும் சேரறமும் சிவநாமம்
தோய்ந்த நாவர்
கற்றுணர்ந்த பயனதனில் காலத்தைப் பொன்னாக்கிக்
கயிலைமலை அதுகண்ட
பற்றகன்ற நற்றுறவி பனந்தாளின் மடத்ததிபர்
பாதம் பணிவோமே.

## திருப்பனந்தாள் ஸ்ரீ கயிலை சுப்பிரமணிய தேசிக சுவாமிகள் மேனிலைப் பள்ளி ஆசிரியர்கள் அளித்த வரவேற்புரையுள் ஒருபகுதி

அருட்பெருந்திருவுடையீர்!

எளியவர்கட்கு இரங்கும் உள்ளம் கொண்டுள்ளீர்கள். கல்வித் தொண்டு புரியக் கல்வி நிறுவனங்களின் நிர்வாகத்தை ஏற்று, அறக்கட்டளை நிதி உதவியும், சைவமும் தமிழும் பரப்பும் நோக்குடன் சமய இதழாக "ஸ்ரீ குமரகுருபரர்" இதழ்; திருமுறை நூல்கள், முதலியன குறைந்த விலையில் வெளியிட்டும் திருக்கோயில்களின் திருப்பணிக்கு நன்கொடை வழங்கியும், ஏழை மக்களின் துயர் துடைத்திட வேண்டுவன உதவியும். இன்னோரன்ன பல ஒப்புரவுகளை நிகழ்காலச் சூழ்நிலைக்கேற்ப ஆற்றிவருவதைப் பனசை வாழ் மக்களும், அரசியல் தலைவர்களும் போற்றி வருகிறார்கள்.

தொண்டுள்ளம் படைத்த தோமில் குணத்தோய்!

ஊர் போற்றும் உத்தமராக-நாடுபோற்றும் நல்லோராக பார் புகழும் தெய்வச் சான்றோராக உயர்ந்திடும் தகுதிகள் தங்களைச்

சார்ந்து வருவதால் தம்மைத் தலையாகச் செய்யும் நன்முயற்சியின் உச்சக்கட்டமாகத் தாம்செல்லுதற்கரிய இடர்கள் பலநிறைந்த திருக்கயிலாயப் புனித யாத்திரையைத் துணிவுடனும், தியாகத்துடனும் மேற்கொண்டு மெய்யுணர்வோடும் குறை ஏதுமின்றி நிறைஇன்பம் பெற்று வெற்றி நடையாய் வீறுடன் திரும்பியது வியப்புக்குரியதாகும்.

குறைகளையும் குணக்குன்றும் பெருந்தகையோய்!

திருக்கயிலாய மலையின் அற்புதமான தோற்றத்தைச் சிவபெருமானின் பேரொளிவடிவமாய்த் தரிசித்து அரிய அனுபவங்களுடன் ஈடு இணையற்ற புனிதப் பயணத்தை முடித்துக் கொண்டு பனசைத் திருக்மடத்திற்குத் தாங்கள் திரும்பும் நன்னாளை எதிர்நோக்கியிருந்த எளியோங்களுக்குத் தங்கள் அருட்காட்சி நாங்கள் பெற்ற பேறாகும். தெய்வக்களையின் சுவடுகளைத் தங்கள் திருமுகப் பொலிவிலும் திருமேனியிலும் இன்று கண்டு கண்டு மகிழ்கிறோம்.

## திருப்பனந்தாள் ஸ்ரீ குமரகுருபர சுவாமிகள் நடுநிலைப்பள்ளி ஆசிரியர்கள் அளித்த வரவேற்பில் ஒருபகுதி:

தாரணி போற்றுந் தவத்திருவே!

காசிவாசியெனப் பேசிவந்த அனைவரையும் கயிலாய காசியெனப் பேசவைத்த கயிலைத்தலம்கண்ட காசிவாசி சுவாமிகளே! கண்ணார் அமுதமே! கருத்தார் நற்றவமே! தண்ணார் தமிழ்க்கடலே! தகைமிகு தவக்குன்றே! கயிலைகண்ட கண்மணியே! தங்களின் பொன்னார் திருவடியே போற்றிட்டோம் மகிழ்வுடனே! விண்ணார் அமுதமாய் விரைவுடனே எங்களுக்கு எல்லாநலங்களுமே எய்திடவே அருளியிட மலர் தூவித்தூய்மையுடன் வணங்குகிறோம்.

## திருலோக்கி சைவர்கள் சங்கத்தினர் அளித்த வரவேற்புக் கவிதை:

இமயத்தில் இறைவனுறை கயிலை என்னும்
　　எழிலார்ந்த சிவப்பதிக்கே சென்று மீண்ட
சமயத்தின் தலைமகனே! அறங்களாற்றிச்
　　சங்கங்கள் மேலோங்க வைக்கும் கோவே!

உமையவளும் சிவனும்போல் ஒன்றிச் சைவம்
ஓங்குதற்கே உழைப்பீயும் செங்கரும்பே!
இமயம்வரை பனசைமலர் புகழ்மணக்க
இனிதாற்றும் கனிச்சுவையே! வாழ்க நீவீர்!

அவனியெங்கும் சிவன்நாமம் ஒலித்தவாறே
அரும்சைவப் பயிர்வளர்க்கும் அறப்பிறப்பே!
உவப்போடே கொடைவழங்கி ஆலயங்கள்
உயர்வெய்தத் திருப்பணிகள் ஆற்றும் நல்லோய்!
தவத் தருவே! தண்மதியே! தமிழின் சாறே!
தமிழ்காத்துத் தமிழாயும் அமிழ்த ஊற்றே!
சிவனின்றிச் சீவனில்லை, என்றியம்பும்
செம்மையுடை மாமுனியே வாழ்க நீவீர்!

கங்கையிலே அமிழ்ந்திட்டுப் புனிதமுற்ற
கருணையுரு அருளரசின் வாரிசாகித்
தங்கமெனச் சுடர்நல்கும் தண்மனத்தோய்!
தரணியெலாம் சைவத்தைத் தழைக்க வைப்போய்!
சிங்கத்தின் மேலமர்ந்தே அரசவைக்குச்
சென்றவராம் குருபரர்தன் தமிழின் தொண்டை
மங்காது பொங்கிடவே ஏற்றுச் செய்யும்
மாமேரே! பூமணமே! வாழ்க நீவீர்!

திருமிகு ஞானகாந்தம், வீ. ராணி
அளித்த வரவேற்புக் கவிதையின் ஒருபகுதி.

முத்துக் குமர முத்தே வருக
சத்துவ அறிவுடை சித்தே வருக
தத்துவ முறையறி வித்தக வருக
வளமுடன் வாழ உளமுடன் வாழ்த்தி
எந்நாட்ட வரையும் என்றும் காக்கும்
தென்னா டுடைய சிவனடி போற்றுதும்;

தருமையாதீனம் ஸ்ரீலஸ்ரீ குருமகா சன்னிதானம் அவர்கள் 'கயிலைமாமுனிவர்' சிறப்பு விருது அளித்த நாளில் (16-8-82) தருமையாதீனம் கல்விநிலையங்களின் சார்பில் அளித்த வரவேற்புரையின் ஒரு பகுதி :

அருந்தவ முனிவரே! ஆதீனத்தின் கண்மணியே!! வருக! வருக!!
அறப்பணிகள் பல ஆற்றும் அருள் வள்ளலே வருக! வருக!!
கயிலைமாமுனிவரே வருக! வருக!!

ஸ்ரீ காசிமடம் திருச்செந்திலாண்டவனின் திருவருளும் குரு அருளும் கூட்டுவிக்கப் பல்லாண்டுகளாகச் செய்து வரும் அறப்பணிகளை நாடு அறியும். செந்தமிழும் சிவநெறியும் தழைத்து இனிதோங்க நிலையான வைப்பு நிதிகளை அமைத்து அவற்றைப் பராமரிக்கத்தக்க ஏற்பாடுகளும் செய்துவருகின்ற சிறப்பு அனைவரும் போற்றற்குரியது. காசி முதல் குமரி வரை அன்னம் பாலிப்பு, திருமுறைப் பதிப்பு, திருமுறை ஓதுதல், பல்வேறு போட்டிகளில் பரிசளிப்பு போன்றவற்றிற்கு வைப்பு நிதிகளை அமைத்து அவற்றின் மூலம் சைவமும் தமிழும் தழைத்தினிதோங்கச் செய்துவரும் பணிகளைப் போற்றுதவர் இல்லை. ஞாலம் நின்புகழே மிகவேண்டும் என்னும் தாரக மந்திரத்தினையே ஆதார சுருதியாகக கொண்டு அளித்துவரும் கொடைகள் சமய மறுமலர்ச்சியினைப் பல இடங்களில் தோற்றுவித்து வருகின்றன. இத்தகைய சிறப்புக்களை உடைய ஸ்ரீ காசிமடத்தின் அதிபராக விளங்கியருளிச் சிவபக்தியும் குருபக்தியும் இருகண்களாகக் கொண்டு அருளும் ஸ்ரீலஸ்ரீ காசிவாசி சுவாமிகளின் பொன்னடி போற்றி வருக வருக என்று வரவேற்பதில் அகமகிழ்வு கொள்கிறோம்.

29-8-62 அன்று தில்லையில் ஸ்ரீ சபாநாயகர் தேவஸ்தானத்தில் நடைபெற்ற வரவேற்பு விழாவில் பொதுதீக்ஷிதர்கள் அளித்த பா மலர்களில் சில:

(V. S. நடனசபாபதி தீக்ஷிதர், C. K நாகராஜ தீக்ஷிதர் சாபில் கவிதை அமைப்பு, திரு. சி. ஞானஸ்கந்த தீக்ஷிதர்)

தில்லையுள் ஆடும் கூத்தன்
திருவடி நிறையும் சிந்தை
வல்லநற் பனசை வேந்தே
வாழ்வினிற் காண வேண்டும்

எல்லையில் புகழின் மிக்க
இமயத்தின் சிகரம் தம்முள்
நல்லதாம் கயிலை கண்டீர்
நானிலம் புகழ வாழ்க
அருணந்தி அந்நாளில் ஆக்கிவைத்த
பேரறங்கள் அழகாய் நிகழப்
பொருள் மிகவும் செலவுசெய்து புகழ்மிகவே
பெற்றுள்ளீர் போற்றுகின்றோம்
அருள்நெறியே அகிலமெல்லாம் பரவுமுறை
ஆய்ந்ததனில் முடன்று நீவிர்
அருள்வடிவாள் உடனுறைய அம்பலவர்
ஆசியினால் நீடுவாழ்க.

தில்லைத் தமிழ் மன்றத்தின் சார்பில்
திரு R. கனகசபை திரு. G. வாகீசம்பிள்ளை திரு. S. திருநாவுக்கரசு
அளித்த வரவேற்புக்களின் ஒருபகுதி;-
(கவிதை அமைப்பு: புலவர் திரு. தா. முருகேசன்)

இளமையினில் நம்கயிலைக் குருமணியின் அருளாணை தன்னையேற்று
வளமிகு நல் தமிழ்பயின்று மாசில்லாச் சாத்திரங்கள் அனைத்தும் கற்று

இளமதியைச் சூடியவன் இன்னருளைப்பெற்றிட்ட ஏற்றம் மிக்கோய்!
தளபதியாய்ச் சைவத்தைக் காத்துவரும் தமிழன்ப! தறுகணாள!

அடுக்கடுக்காய் வந்ததுயரனைத்தையுமே அகமலர்ந்து அயரா தேற்று
இடுக்கணுக்கு இடுக்கண்விளை அருட்திறத்தைக் கண்டுயாம் ஏத்து
கின்றோம்
முத்துக் குமாரனென்னும் முதறிஞப் பெருந்தகையே! வருக! வருக!
எத்திக்கும் போற்றும் வணம் சைவநெறி பரப்பிவந்து எங்கள் உள்ளம்
தித்திக்கும் செந்தமிழில் சிவநெறியைப் போதிக்கும் செம்மல் வருக!
புத்திக்கும் எட்டாத புங்கவனைக் கண்டுவந்த கருத்தாழம் மிக்க எம்
தலைவ வருக! வருக?

## தில்லைத் திருமுறைக் கழகச் சார்பில் செயலாளர்கள்
## திரு குஞ்சிதபாதப் பிள்ளை அவர்களும் திரு S. சுந்தரேசம்பிள்ளை அவர்களும்
## அளித்த பாமாலையின் சில மலர்கள்

உலகமே புருடத் தோற்றம் உயராரூர் மூலா தாரம்
அலகிலா புகழா னைக்கா கொப்பூழண் ணுமலை தான்
மலர்மணி பூரகம் நாகம்மகிழ் தில்லை இருதயம் ஓர்
சலமில்கா ளத்தி கண்டங் காசியே புருவ மத்திமம்

என்பரால் காசிவாசி யாகியே எழுந்த சோதி
அன்பராய் ஆகித் தெய்வ அறமெலாம் நிறுவிக் காத்த
மன்னராம் அருள்நந்தி மரபினைச் செழிக்கச் செய்யும்
பன்னலச் சைவம் பூத்த பரம! நின்னடிகள் போற்றி!

எழுதாத மறைகள் எல்லாம் எழுத்தாக்கி இருபத் தேழ்பேர்
விழுதாரைக் கண்ணால் தந்த வியத்தகு திருமுறையைத்
தொழுதார்வ முற்றே கோயில் தொறும்கல்லில் கனத்தநஞ்சில்
பழுதின்றிப் பதிப்பித் தாண்ட பனசைமா முனியே போற்றி!

வண்டாருங் குழல்மடவா ளுடனுறையும் வடகயிலை
அண்டர்நா யகன்கோலம் அகந்தோயக் கும்பிட்டுப்
பண்டோய்ந்த தமிழ்பாடிப் பரவியபின் இருதயஊர்
கண்டாரே கண்படைத்தார் கயிலைமா முனி போற்றி!

## தில்லை ஸ்ரீ ராமகிருஷ்ண வித்யாசாலை ஆசிரியர்கள்
## அளித்த பாமலரில் சில

பாடலமைப்பு: திரு சி. ஞானஸ்கந்தன்

பயிலுநாள் தொடங்கிப் பாரோர்
  பார்த்திடத் துடிக்கும் அந்தக்
கயிலையங் கிரியைக் காணும்
  கண்கொளாக் காட்சி பெற்றீர்
வெயிலினிற் பனியில் வாடோம்
  வாழ்வினில் நும்மைக் கண்டே
கயிலையைக் கண்ட பேற்றை
  அடியரும் பெற்றோ மன்றே!

தருமநெறி தழைத்திடவே தளராதே உழைத்து உழைத்துத்
தகைமை சான்ற
தருமபுர ஆதீனக் குருபரம்பரை பெருமைபெற
இந்நாள் நீவிர்
பெருமைமிகு மறைபுகழும் பேரானந் தம்அளிக்கும்
கயிலை கண்டீர்!
ஒருமனதோடு இறையருளை வேண்டுகிறோம் நும்தொண்டு
வளர்க வென்றே;

## 25-8-82 அன்று கதிரை கிராமவாசிகளின் வரவேற்புப் பிரதியில் ஒருபகுதி:-

[கவிதை. திரு. ஞானசேகரன்]

சொற்றிறமை மிக்கவரே! பதவித்துச்சம்
சொர்க்கமந்த கயிலையொன்றே நித்தியமென்று
கற்றுணர்ந்த நற்றிறத்தால் காடும் மேடும்
கடுங்குளிரும் பனிச்சரிவும் கடந்து மேலாம்
உற்றதுணை சிவனுக்குச் சிவனே என்னும்
உண்மைதனைக் கயிலைகண்டு உணர்ந்து மீண்டோய்
நற்றவத்தால் கதிரை துர்க்கை அருளும் நோக்கால்
நல்லராய்ப் பல்லாண்டு வாழ்க! வாழ்க!

## தில்லை வார வழிபாட்டுச் சங்கத்தார், தில்லைத் திருப்புகழ்ச் சபையார் அளித்த வரவேற்புக் கவிதையில் ஒரு பகுதி:-

காசி மடத்தின் அதிபரெனக்
கவிஞர் சைவ வாரிதிஎன
மாசி லாத முனிவரேன
நல்லறம் வளர்க்கும் மன்னரெனத்
தேசு நிறையருட் குருவென
நடமாடும் நங்கள் தெய்வமென
மாசு நீக்கவரு மாமருந்தே
மகிழ்ந் தென்றும் வாழ்க! வாழ்க!!

## 12-9-82 அன்று கும்பகோணம் ஆதிகும்பேஸ்வரர் திருக்கோயிலில் நடைபெற்ற மாபெரும் விழாவில்

### பெங்களூர் ம, வே. ஜெயராமன் அவர்கள்

### அளித்த பாராட்டிதழில் ஒருபகுதி

சிவனடியே சிந்திக்கும் திருப்பெருகு சிவஞானம் கைவந்த செம்மலே!

''ஆலயம் தானும் அரன் எனத் தொழுமே'' என்றார் மெய்கண்டார். அவர் கண்ட மெய்மையைத் தங்கள் வாழ்வில் காண்கிறோம். நாடோறும் திருக்கோவில் வழிபாட்டை நழுவவிடுவதில்லை. துறவுக்கு ஓர் எடுத்துக்காட்டு தங்கள் தூய வாழ்வு. காசித் திருப்பணிகளைக் கண்ணும் கருத்துமாகக் காப்பாற்றிவரும் கடமையுணர்வு: தமிழ் பயின்று தமிழ் வளர்க்கும் சதுரப்பாடு. அயரா உழைப்பு. அருள் ததும்பும் உள்ளம். அனைத்திற்கும் 'சிகரமாக' அரனுறையும் கயிலை யாத்திரை அமைந்துள்ளது. 'செயற்கரிய செய்வார் பெரியார்' என்ற வள்ளுவர் வாக்கிற்கு இலக்கணம் வகுத்த பெருமையைத் தங்கள் வாழ்வில் காணும் பாக்கியம் சைவ உலகிற்கு இன்று கிடைத்துள்ளது. ஆத்திகப் பெருமக்கட்கு நம்பிக்கை ஒளியாக நிலவும் தங்களை இந்த நன்னாளில் பாராட்டும்பேறு கிடைத்தமைக்குப் பெரிதும் மனமகிழ்ச்சியடைகிறேன்.

''அரன் நாமமே சூழ்க
வையகமும் துயர் தீர்கவே''



வாழி திருமன்றம் கண்ட மலர்க்கண்கள்
வாழி பெருமான் புகழ்கேட்ட வார்செவிகள்
வாழி அவனை வணங்கும் முடிச்சென்னி
வாழியவன் சீர்பாடும் வாய்.

ஸ்ரீ குமரகுருபரர்.

 

ஸ்ரீ குமரகுருபர சுவாமிகள் அருளிய
திருச்செந்தூர்க் கந்தர்கலிவெண்பா
L. P. இசைத் தட்டுக்கள் (E. C. S. D. 35503)

கயிலைமாமுனிவர்
ஸ்ரீலஸ்ரீ காசிவாசி எஜமான் சுவாமிகள் அவர்கள்
அருளாணையின் வண்ணம்

தி கிராமபோன் கம்பெனி ஆப் இந்தியா-வினரால்

வெளியிடப்பெற்றவை

பாடியவர்: டாக்டர் சேலம் ஜெயலெட்சுமி

திருக்கோயில்கள், திருமுறை விழாக்கள், பொதுக்கூட்டங்கள் தெய்விக நிகழ்ச்சிகள் ஆகியவைகளில் கந்தன் அருள் கவிதை ஒலியைப் பரப்பி அருள் நலம்பெறுக! விபரங்களுக்கு,

மேலாளர்
ஸ்ரீ காசிமடம் திருப்பனந்தாள்-612 504

ஸ்ரீ ஆதிகுமரகுருபர சுவாமிகள்
மகேசுவர பூசை வெளியீடு

1 பெரிய புராணம் (மூலம்) ... விலை ரூ. 12—00

இலங்கை உலக இந்து சமய மாநாட்டு வெளியீடு:

2. "Pees into the Cultural Heritage of Hinduism" Rs. 25-00

By Thiru. M. Arunachalam, M. A.,

ஸ்ரீலஸ்ரீ காசிவாசி எஜமான் சுவாமிகள் அருளாட்சியின்
பத்தாண்டு நிறைவு வெளியீடு:

3. சேக்கிழார் புராணம், திருமுறைகண்ட புராணம் விலை. ரூ. 0—75
4. திருவிளையாடற் புராணம் (உரை நடை)
கூடற்காண்டம் விலை. ரூ. 3—50

விற்பனையாளர்களுக்கு 20% கழிவு உண்டு.

மேலாளர்,
ஸ்ரீ காசிமடம், திருப்பனந்தாள்—612 504.

உ

குருபாதம்

''காவாய் கனகத் திரளே போற்றி
கயிலை மலையானே போற்றி போற்றி''

நமது கண்மணியிற் சிறந்த காசிவாசி முத்துக்குமார சுவாமித் தம்பிரானுக்குப் பண்டாரத் திருவுள்ளத்தினாலே சிவக்ஞானம மென்மேலும் உண்டாவதாக.

நாளது துந்துபி ஆண்டு ஆனித்திங்கள் 31ஆம் நாள் (15-7-82) நவமி திதி, பரணி விண் மீன் கூடிய நன்னாளில் திருக்கயிலாய நாதனை தரிசித்துப் பெறுதற்கரிய பேற்றினைப் பெற்றதை முன்னிட்டு அங்குத்திக்கு

''கயிலைமா முனிவர்''

ஸ்ரீ காசிவாசி முத்துக்குமார சுவாமித் தம்பிரான்

என்னும் நாமம் நானிலம் எங்கும் நயப்புற மன்னுவதாக.

தருமை ஆதீனம்,
16-8-82.

ஸ்ரீ காசிமடத்திற்காக வெளியிட்டவரும் ஆசிரியரும் ம. வை. பசுபதி.
திருப்பனந்தாள் ஸ்ரீ காசிமடம் ஸ்ரீ குமரகுருபரர் அச்சகத்தில்
அச்சிட்டவர் முத்து. மெய்கண்டதேவன்
முகவரி:- ஸ்ரீ காசிமடம், திருப்பனந்தாள் - Pin 612 504